# ஏழிளந்தமிழ் நீதிநூல்கள்

மூதறிஞர் வ. சுப. மாணிக்கம்



ஸ்ரீஸ்ரீஸ்ரீ எச்சில் பொறுக்கி

## ஆறுமுக சுவாமியின்
## 41 - ஆம் ஆண்டு குருபூஜை
மற்றும்
## AL.C மணிமண்டபம் திறப்பு விழா



# ஏழிளந்தமிழ்

## நீதிநூல்கள்

*உரை ஆசிரியர்:*

மூதறிஞர் செம்மல்

**வ.சுப. மாணிக்கம்**


**மணிவாசகர் பதிப்பகம்**

31, சிங்கர் தெரு, பாரிமுனை

சென்னை-600108.

முதல் பதிப்பு : டிசம்பர், 2006
ஆறாம் பதிப்பு : சூன், 2022
திருவள்ளுவர் ஆண்டு : 2053

**விலை : ரூ. 50.00**

மணிவாசகர் பதிப்பக வெளியீட்டு எண் : 1230



நினைவில் வாழும்
நிறுவனர்
**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச.மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின்முன்னாள்தமிழ்ப்பேராசிரியர். பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.'வள்ளுவம்' இதழின் நிறுவன ஆசிரியர்.
குன்றக்குடி அடிகளார் 'தமிழவேள்' என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் 'செந்தமிழ்க் காவலர்' என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர். 'பதிப்புச்செம்மல்' என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

கிடைக்குமிடங்கள் :
**மணிவாசகர் நூலகம்**
12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608001. ☎ :04144-222856
31, சிங்கர் தெரு, பிராட்வே, சென்னை- 600104. ☎ :044-25361039
19, ராஜா தெரு, தி.நகர், சென்னை - 600017. :✆9382999914
110,வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625001. ☎ :0452-4231151
15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641001. ☎ :0422-2397155
296/134, செரி சாலை, சேலம் - 636007. ☎ :0427-4262992
28, நந்தி கோயில் தெரு, திருச்சி- 620002. ☎ :0431-2706450

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை - 600 021. தொலைபேசி : 25954528



மூதறிஞர் செம்மல்

**வ.சுப. மாணிக்கனார்**

**1917 - 1989**

## மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கனார்
## வாழ்க்கைக் குறிப்பு

பிறப்பு : 17.4.1917 (மேலைச் சிவபுரி, புதுக்கோட்டை மாவட்டம்)

பெற்றோர் : வ. சுப்பையா – தெய்வானை ஆச்சி

கல்வி : அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 'வித்வான்' படிப்பு, முதல் வகுப்பு தேர்ச்சி (1940) பி.ஒ.எல் – 1945; எம்.ஒ.எல் – 1948; எம்.ஏ – 1951; பி.எச்.டி – 1957

பணி : அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 'விரிவுரையாளர்' ஏழு ஆண்டுகள் (1941–1948); காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் (1948 – 1964)

முதல்வர் : அழகப்பா கல்லூரியில் ஆறு ஆண்டுகள் முதல்வர் (1964 – 1970). அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவர் (1970–1977).

அங்கு ஏழு ஆண்டுகள் புல முதன்மையர்.

துணைவேந்தர்: மதுரை காமராசர் பல்கலைக்கழகம் (17–8–1979 – 30–6–1982); பண்டிதமணி கதிரேசனார் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியமை.

பல்கலைக்கழகத்தில் உருவாக்கிய துறைகள்:

1979 – எரியந்துறை, 1980 – மேலாண்மைக்கல்வி
1981 – பதிப்புத்துறை, – மொழியியல் துவற
1982 – தமிழியற்புலம்.

எழுத்துப்பணி : மனைவியின் உரிமை– முதல் நூல் – 1947.
வள்ளுவம் – 1953; தமிழ்க்காதல் – 1957; கம்பர் – 1965 (தமிழக அரசின் முதற்பரிசு பெற்றது).

மாணிக்கக் குறள் – 1989

தமிழ்ப் பல்கலைக்கழக வடிவமைப்புக் குழுத் தலைவர் – 1981

புலவர் குழுத் தலைவர் : (1974 – 1989)

பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத் தலைவர்

தமிழ்வழிக்கல்வி இயக்கம் : 1988

தில்லையில் திரு முறை அம்பலம் ஏறச்செய்தல்

தமிழ்ப் பல்கலைக்கழக 'தொல்காப்பிய தகைஞர்' – 1985 – 86

குடும்பம் :

உடன் பிறந்தோர் : வ.சுப. திருப்பதி செட்டியார்.
வ.சுப. சொக்கலிங்கம்

மனைவி : ஏகம்மை ஆச்சி

மகன்கள் : தொல்காப்பியன் , பூங்குன்றன், பாரி

மகள்கள் : தென்றல் , மாதரி, பொற்கொடி

வெளிநாடு பயணம் : இலங்கை , மலேசியா, ஐரோப்பா

பெற்ற பட்டங்கள் :

மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை: 'செம்மல்'
குன்றக்குடி ஆதீனம் : 'முதுபெரும் புலவர்'
ஈப்போ பாவாணர் தமிழ்ச்சங்கம் : 'பெருந்தமிழ்க்காவலர்'
திருவனந்தபுரம் திராவிட மொழியியற் கழகம் :
'முதுபேராய்வாளர்'
அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பொன்விழாவில்
டி.லிட். பட்டம் – 1979

தமிழக அரசு : திருவள்ளுவர் விருது – 1989

மறைவு : 24–4–1989

# உள்ளுறை


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | ஆத்திசூடி | ..... | 13 |
| 2. | கொன்றை வேந்தன் | ..... | 21 |
| 3. | மூதுரை | ..... | 29 |
| 4. | நல்வழி | ..... | 37 |
| 5. | நறுந்தொகை | ..... | 49 |
| 6. | நன்னெறி | ..... | 61 |
| 7. | உலகநீதி | ..... | 73 |





# ஏழிளந்தமிழ்

(நீதி நூல்கள்)

மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கம்

"ஆத்தி சேர் கொன்றை அழகு தமிழ் மூதுரை
பாத்தி சேர் நல்வழி பண்புலகம் - பூத்த
நறுந்தொகை நன்னெறி ஏழும் குழந்தைக்
குறுந்தமிழ் என்றறிந்து கொள்."

*- வ.சுப.மா.*

ஆத்திசூடி முதலிய இந்த ஏழு நீதி நூல்களும் நம் முன்னோர்களால் முன்' திண்ணைப் பள்ளிகளில் முறையாகப் பயிலப் பெற்றன. இதனால், குன்றாத் தமிழ் ஒலியும், குறையாத் தமிழறிவும், வளமான தமிழ் அடிப்படையும், வாய்க்கப் பெற்றனர். முதுமையிலும் இந்த இளங் கல்வியை நினைந்து நினைந்து செம்மை யாக வாழ்ந்தனர். இத்தொல் மரபுப்படி ''ஏழிளந்தமிழ்'' மீண்டும் தொடக்கப் பள்ளிகளில் முழு நூல்களாக இடம்பெற வேண்டும்.

இதனால் நம் இளஞ்சிறார்கள் இலக்கிய அளவிலே இயல்பான இலக்கணத்தினைப் பெற்று விடுவர். மொழித்திறம் ஊற்றுப்போல பத்து வயதிற் குள் படிந்து விடும். ஏழிளந்தமிழை இளஞ்சிறார்கள் இளமையிலே கற்று, பிஞ்சு நெஞ்சங்களில் மனப்பாடம் செய்து கொண்டால், அவர்கள் முழு வாழ்வும் மிகவும் சிறப்பாக அமையும் என்பது உறுதி.

> சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே அதைத்
> தொழுது படித்திடடி பாப்பா.
>
> *பாரதியார்*

# என் குறிக்கோள்

'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும், வாய்மையின் நல்ல பிற' என்ற வள்ளுவம், என் வாழ்க்கையில் எஞ்ஞான்றும் கடைப்பிடித்து ஒழுகிவரும் உண்மை நெறியாகும். என் எண்ணங்களும் செயல்களும் எழுத்துக்களும் முன்னேற்றங் களும் பணிமுறைகளும் வாய்மையாற் செம்மைப் பட்டன...

எளிய வாழ்வு,
அளவான பேச்சு,
எந்நிலையிலும் எதிர்கால நம்பிக்கை,
பதவிகளைத் தொண்டாக மதித்தல்,
தன்னைப் பற்றிய திருத்தமான சிந்தனைகள்,
வாழ்க்கைத் திட்டங்கள்,
பெரியவர்களின் வரலாறுகளைப் படித்தல்,
சோர்வுக்கு இடங் கொடாத ஊக்கங்கள்,
பகட்டின்றித் தூய எண்ணத்தால்
இறைவனை வழிபடுதல்

இவையெல்லாம் நான் கண்ட முன்னேற்ற நெறிகள்.

தமிழுக்குத் தொல்காப்பியமும்,
வாழ்வின் உயர்வுக்குத் திருக்குறளும்,
உயிர்த் தூய்மைக்குத் திருவாசகமும்
எனக்கு வழிகாட்டிய தமிழ் மறைகள்.

எங்கள் தாய்வழி அய்யாவுக்கும், ஆயாளுக்கும்,
என் ஆசான் இருமொழிப்புலமை சான்ற
மகிபாலன்பட்டி பண்டிதமணி கதிரேசனார்க்கும்
நானும் என் வழியினரும் நன்றியுடையோம்''

- வ.சுப.மா.

## வ.சுப.மா. அவர்களின் நன்மொழி

1. புகழ் விருப்பம் தவறன்று; எனினும் அதற்குரிய செயல் விருப்பம் வேண்டும்.

2. தளர்வு வருதல் இயல்பே; அதனை நிமிர்த்துக் கொள்ளுதல் அறிவுடைமை.

3. தக்கோரால் மதிப்புப் பெறுவதே சால்பு.

4. வீம்பு சிறுபொழுது இருக்கலாம். அது தானே விலக வேண்டும். இது குடும்பத்துக்குப் பண்பு.

5. நாள்தோறும் நெஞ்சினையும் தூய்மைக் குளியல் செய்க.

6. தன்னைச் சூழ்ச்சியாகப் பிறர் பயன்படுத்திக் கொள்ள இடங்கொடுத்தல் ஆகாது.

7. நன்றி மனிதப் பண்புகளுள் தலையாயது. மனத்தைப் பண்படுத்துவது.

8. சிலவற்றைப் பொருட்படுத்தாமல் அலட்டிக் கொள்ளாமல் இயல்பாக விட்டுவிடுவது வாழ்வு முறையுள் ஒன்று.

9. கவலை என்பது எண்ணங்களுள் ஓர் அலை.

10. பெருமை பொறுமையால் வலுப்பெறும்; பொறுமை தெளிந்து துணியும் செயலால் வலுப்பெறும்.



# மாணிக்கனார் வகுத்த எளிய உரை

டாக்டர் ச. மெய்யப்பன்

மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் உள்ளம், சொல், செயல்களால் தூயர். நாடு நலம் பெற நற்கருத்துக்களை நாளும் எண்ணி எழுதியவர். சிறுவர் நெஞ்சங்களில் நற்கருத்துக்கள் நாளும் விதைக்கப் பெறல் வேண்டும் என்ற நல்ல நோக்கினர். ஆத்திசூடி அமைப்பில் 'தமிழ்சூடி' இயற்றிச் சிறுவர் உள்ளமும் வாழ்வும் செழிக்க வழிவகை கண்டவர். நல்ல கருத்துக்களைப் பரப்பும் நோக்கில் 'மாணிக்கக் குறள்' இயற்றிய மாண்பினர். திருக்குறள் சிந்தனைகளைத் தெளிவாக உணர்த்த செவ்விய உரை கண்ட செம்மல்.

காரைக்குடியில் தமிழ்ச்சங்கம் அமைத்து அதன் தலைவராய் விளங்கிய மாணிக்கனார் தமிழ்ப் பாடல்களையும் நீதி நூல்களையும் சிறுவர்கள் நெஞ்சகத்தில் என்றும் நிலை நிறுத்த விரும்பினார். ஆத்திசூடி, கொன்றை வேந்தன, நறுந்தொகை, மூதுரை, நல்வழி, நன்னெறி, உலக நீதி ஆகிய நூல்களுக்கு எளிய தெளிவுரை வகுத்துத் தமிழ்ச் சங்க வெளியீடாகப் பல பதிப்புக்கள் வரச் செய்தார். தமிழ்ச்சங்கம் மூலம் நீதி நூல் ஒப்புவித்தல் போட்டி நடத்தி ஆண்டு தோறும் சிறுவர்களுக்குத் தொடர்ந்து பரிசுகள் நல்கினார். வளரும் பயிருக்கு உரமும் நீரும் ஒளியும் அளித்துக் காப்பதில் வல்லவர். செறிவு நடையும் புலமை நடையும் வல்ல மாணிக்கனார் சிறுவர் பொருட்டு மிக மிக எளிய தமிழில் பழகு நடையில் உரை வகுத்துள்ளார்.

நீதி நூல் கருத்துக்கள் பரவ வேண்டும் என்ற எண்ணத்திற்குச் செயல் வடிவம் கொடுத்தார். காரைக்குடி தமிழ்ச் சங்கத்தைப் பயன்படுத்திக் கொண்டார்; பயிற்றுவித்தார்; பரிசுகள் நல்கினார். நீதி நூல்களுக்கு எளிய உரை வகுத்தார்.

செயல் செயல் என வாழ்ந்த செம்மல். வாய்ச்சொல் வீரராக வாழாமல் சொல்லியவண்ணம் செய்து முடித்த பெருமகனாராகவும் திகழ்ந்தார்.

இவர், கற்றல், கற்பித்தல் முதலிய கல்வி நெறிகளில் சீரிய கோட்பாடுகளுடன் வாழ்ந்த பேராசிரியர். இவரது எழுத்தும் பேச்சும் இவர்தம் கல்விக் கொள்கைகளைப் பறைசாற்றுகின்றன. தூய வாழ்வினராகிய மூதறிஞர் நன்முறையில் நீதி நூல் இயற்றத் திட்டமிட்டிருந்தார். இவரது வாழ்க்கைக் குறிப்பு இதனை உணர்த்துகிறது. சிறுவர்களுக்குரிய நீதி நூல்களைப் பற்றி பேராசிரியர் எழுதிய ஆய்வுக் கட்டுரை பெருஞ் சிறப்புடையது.

இளைஞர்களுக்கு உடல், உள்ளம், உயிர் பற்றிய நல்வழிக் கருத்துக்கள், நல்வாழ்வுக் கோட்பாடுகள் தமிழில் எவ்வாறு சொல்லப்பட்டுள்ளன என்பதை நீள நினைந்தவர். நன்கு ஆராய்ந்தவர். தமிழ் நெடுங்கணக்கோடு தமிழ் அறக்கோட்பாடு களும் வளரும் குழந்தைகள் நெஞ்சில் பதிய வைப்பதில் செயல் ஆர்வம் காட்டியவர்.

தமிழர் வாழ்வு நலக் கோட்பாடுகளை ஏழு நீதி நூல்களும் இலக்கிய இன்பமுறும் வகையில் எடுத்தியம்பும் திறத்தினை இவர்தம் ஆராய்ச்சி முன்னுரையில் அறிந்து கொள்ளலாம். பேராசிரியரின் கனவு நனவாகத் தமிழ்நாட்டுத் தொடக்கப் பள்ளிதோறும் மீண்டும் நீதிநூல் கல்வி கட்டாயப்படுத்தப்பட வேண்டும். இந்த அரிய நல்ல பணியைச் செய்த பேராசிரியர்க்குத் தமிழ் உலகம் கடமைப்பட்டுள்ளது.



சிவபெருமான் விரும்பும் விநாயகக் கடவுளைப்
பலமுறை வாழ்த்தி வணங்குவோம்.

1. நல்லன செய்ய ஆசைப்படு.
2. கோபத்தை அடக்கிக் கொள்.
3. கொடுக்க முடிந்த பொருளை ஒளிக்காமல் கொடு.
4. ஒருவர் மற்றொருவர்க்குக் கொடுப்பதைத் தடுக்காதே.
5. உன் உடைமைப் பொருளை வெளிப்படப் பலமுறையும் சொல்லாதே.
6. மனவலிமையைக் கைவிடாதே.
7. கணக்கையும் இலக்கணத்தையும் இகழாமல் நன்றாகக் கற்றுக்கொள்.
8. ஒருவரிடம் போய் இரப்பது பெருமைக் குறைவாகும்.
9. ஏழை எளியவர்கட்குச் சோறு போட்டு நீ உண்.
10. உலகத்தோடு ஒத்து நடந்து கொள்.
11. எக்காலத்தும் படித்துக் கொண்டேயிரு.
12. யாரிடத்தும் பொறாமையுடன் பேசாதே.
13. தானியங்களை அளவு குறைத்து விற்காதே.
14. கண்டபடி மாற்றிச் சொல்லாதே.
15. 'ங' எழுத்துப்போல் நீயும் உன் சுற்றத்தைத் தழுவு.
16. சனிக்கிழமைதோறும் எண்ணெய் முழுகு.
17. யாரிடமும் இனிமையாகப் பேசு.
18. இடம் பெரிதாக வீட்டைக் கட்டாதே.
19. நல்ல குணம் உடையவரோடு நட்புச் செய்.
20. தாய் தந்தையரை மதித்துக் காப்பாற்று.
21. பிறர்செய்த நன்மைகளை மறக்காதே.
22. எந்தச் செயலையும் உரிய காலத்திலேயே செய்.
23. நீதிமன்றத்தில் இலஞ்சம் வாங்கி வாழாதே.

''சங்கத் தமிழ் மூன்றுந் தா'

# ஆத்திசூடி

## ஔவையார் இயற்றியது.

### கடவுள் வணக்கம்

ஆத்தி சூடிஅமர்ந்து தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே

1. அறஞ்செய விரும்பு
2. ஆறுவது சினம்
3. இயல்வது கரவேல்
4. ஈவது விலக்கேல்
5. உடையது விளம்பேல்
6. ஊக்கமது கைவிடேல்
7. எண்ணெழுத் திகழேல்
8. ஏற்ப திகழ்ச்சி
9. ஐய மிட்டுண்
10. ஒப்புர வொழுகு
11. ஓதுவ தொழியேல்
12. ஔவியம் பேசேல்
13. அஃகம் சுருக்கேல்
14. கண்டொன்று சொல்லேல்
15. ஙப்போல் வளை
16. சனிநீ ராடு
17. ஞயம்பட வுரை
18. இடம்பட வீடெடேல்
19. இணக்கமறிந் திணங்கு
20. தந்தை தாய்ப்பேண்
21. நன்றி மறவேல்
22. பருவத்தே பயிர்செய்

24. நல்லொழுக்கத்திற்கு மாறாக நடக்காதே.
25. நச்சுப்பாம்புகளைத் தொடாதே.
26. இலவம் பஞ்சுபோல மெல்லத் தூங்கு.
27. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதே.
28. சிறப்பில்லாத செயல்களைச் செய்யாதே.
29. இளம் பருவத்திலே கல்வி கற்கத் தொடங்கு.
30. அறத்தினை மறவாமற் செய்.
31. காலையில் அதிக நேரம் தூங்காதே.
32. கடுமையாகப் பேசுவதை மறந்துவிடு.
33. நல்ல கொள்கையை விடாமல் காப்பதே விரதமாகும்.
34. பிறர்க்குப் பயன்படும்படி வாழ்வாய்.
35. இழிவான குணத்தையும் செயலையும் நீக்கு.
36. உயர்குணத்தை எந்தநிலையிலும் கைவிடாதே.
37. ஒருவரிடம் கூடிப் பழகிய பிறகு பிரியாதே.
38. பிறர்க்குத் தீங்கு செய்வதை நீக்கு.
39. நல்ல கருத்துக்களை விரும்பிக் கேட்க முயற்சி செய்.
40. உனக்குத் தெரிந்த கைத்தொழிலைப் பிறர்க்கு மறைக்காதே.
41. பிறர் பொருளைக் கொள்ளையடிக்க ஆசைப்படாதே.
42. தீங்கான விளையாட்டுக்களை நீக்கு.
43. அரசு இடும் சட்டத்துக்கு அடங்கி நட.
44. கல்வி அறிவி ஒழுக்கம் நிறைந்தவர்களுடைய கூட்டத்தில் எப்பொழுதும் இரு.
45. பொய்யான சொற்களை மெய்யென்று நம்பும்படி பேசாதே.
46. நல்ல பண்புகளை மறக்காதே.
47. கேட்போர் வெறுப்பு அடையும்படி பேசாதே.
48. சூதாடுதலை விளையாட்டாகவும் விரும்பாதே.
49. செய்யும் செயல்களைச் செம்மையாகச் செய்.
50. நல்ல இடமாகத் தேர்ந்தெடுத்துச் சேர்ந்து கொள்.

24. இயல்பலா தனசெயேல்
25. அரவ மாட்டேல்
26. இலவம் பஞ்சிற்றுயில்
27. வஞ்சகம் பேசேல்
28. அழகலாதன செயேல்
29. இளமை யிற்கல்
30. அறனை மறவேல்
31. அனந்த லாடேல்
32. கடிவது மற
33. காப்பது விரதம்
34. கிழமைப் படவாழ்
35. கீழ்மை யகற்று
36. குணமது கைவிடேல்
37. கூடிப் பிரியேல்
38. கெடுப்ப தொழி
39. கேள்வி முயல்
40. கைவினை கரவேல்
41. கொள்ளை விரும்பேல்
42. கோதாட் டொழி
43. சக்கர நெறிநில்
44. சான்றோ ரினத்திரு
45. சித்திரம் பேசேல்
46. சீர்மை மறவேல்
47. சுளிக்கச் சொல்லேல்
48. சூது விரும்பேல்
49. செய்வன திருந்தச் செய்
50. சேரிட மறிந்துசேர்
51. சையெனத் திரியேல்

52. சொல்லில் குற்றம்படப் பேசாதே.
53. சோம்பலாகிக் கண்டபடி திரியாதே.
54. சிறந்தவன் எனப் புகழும்படி நடந்துகொள்.
55. எளியவர்கட்குத் தானங் கொடுக்க ஆசைப்படு.
56. நாராயணனுக்குத் தொண்டனாக இரு.
57. கொடுமையான செயல்களை நீக்கு.
58. துன்பம் வரும்படி நடந்து கொள்ளாதே.
59. எந்தச் செயலையும் முறையாக எண்ணிப் பார்த்துப் பிறகு செய்.
60. கடவுளை இகழ்ந்து பேசாதே.
61. நீ வாழும் தேசத்தில் உள்ளவர்களோடு ஒத்து வாழ்.
62. மனைவி சொல்வதையெல்லாம் அப்படியே கேட்டு நடவாதே.
63. பழம் பெருமையை மறவாதே.
64. தோல்வி தரும் செயல்களில் ஈடுபடாதே.
65. நல்ல குணங்களை உறுதியாகப் பற்றிக்கொள்.
66. நாட்டுக்குப் பொருத்தமான நல்ல செயல்களைச் செய்.
67. உனக்கு உரிய நிலையினின்றும் எக்காரணத்தாலும் தாழ்ந்துவிடாதே.
68. ஆழமான நீர்நிலைகளில் விளையாடாதே.
69. நோய் தரும் தின்பண்டங்களைச் சாப்பிடாதே.
70. நல்ல நூல்கள் பலவற்றைக் கற்றுக்கொள்.
71. உழவிற்சிறந்த நெல்லை உண்டாக்கு.
72. நேர்மையாகவும் நாணயமாகவும் நடந்து கொள்.
73. பிறர் வருந்தும் தீய வினைகளைச் செய்யாதே.
74. பயனில்லாத இளக்கமான சொற்களைப் பேசாதே.
75. நோய் வரும்படி நடந்து கொள்ளாதே.
76. பழியான இழி சொற்களைப் பேசாதே.
77. பாம்பைப் போன்ற கொடியவரோடு பழகாதே.
78. மொழியைப் பிழையாகப் பேசாதே.
79. பெருமை தரும் நல்வழியில் நில்.

52. சொற்சோர்வு படேல்
53. சோம்பித் திரியேல்
54. தக்கோ னெனத்திரி
55. தானமது விரும்பு
56. திருமாலுக் கடிமைசெய்
57. தீவினை யகற்று
58. துன்பத்திற் கிடங்கொடேல்
59. தூக்கி வினைசெய்
60. தெய்வ மிகழேல்
61. தேசத்தோ டொத்துவாழ்
62. தையல் சொற்கேளேல்
63. தொன்மை மறவேல்
64. தொற்பன தொடரேல்
65. நன்மை கடைப்பிடி
66. நாடொப் பனசெய்
67. நிலையிற் பிரியேல்
68. நீர்விளை யாடேல்
69. நுண்மை நுகரேல்
70. நூல்பல கல்
71. நெற்பயிர் விளை
72. நேர்பட வொழுகு
73. நைவினை நணுகேல்
74. நொய்ய வுரையேல்
75. நோய்க்கிடங் கொடேல்
76. பழிப்பன பகரேல்
77. பாம்பொடு பழகேல்
78. பிழைபடச் சொல்லேல்
79. பீடுபெற நில்

80. பெரியவர்களை வணங்கி வாழ்க.
81. நிலத்தைச் சீர்திருத்தி விளைவு செய்து உண்பாயாக.
82. பெரியவர்களை வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக் கொள்.
83. மடத்தன்மையை நீக்கிக் கொள்.
84. போக்கிரிச் சிறுபிள்ளைகளோடு கூடாதே.
85. வீண்செலவு செய்யாமல் பொருள்களைக் காத்துப் பெருக்கி வாழ்வாயாக.
86. யாருடனும் வீண் சண்டை போடாதே.
87. எதற்கும் கலக்கம் அடையாதே.
88. பகைவனுக்கு இடங்கொடுத்துத் துன்பம் அடையாதே.
89. தேவையில்லாமல் பேசாதே.
90. அளவுக்குமேல் சாப்பிடுதலை விரும்பாதே.
91. கலகஞ் செய்யும் இடத்தில் நிற்காதே.
92. பிடிவாதக்காரரோடு கூடிப் பழகாதே.
93. மனைவியை விட்டுப் பிரியாது வாழ்வாயாக.
94. உயர்ந்தவர் சொற் கேட்டு நட.
95. பரத்தையர் வீட்டை நாடாதே.
96. சொல்வதை ஐயத்திற்கு இடமில்லாமல் தெளிவாகச் சொல்.
97. தேவையில்லாத பொருள்கள் மீது ஆசையை நீக்கு.
98. உன்னுடைய வல்லமையை நீயே புகழ்ந்து பேசாதே.
99. யாரிடத்தும் வீண் வாதங்கள் செய்யாதே.
100. கல்வியைத் தொடர்ந்து கற்க ஆசைப்படு.
101. பேரின்பம் கிடைக்கும்படி நடந்துகொள்.
102. நல்ல பண்புகளில் மேம்பட்டு விளங்கு.
103. ஊர்மக்களோடு ஒத்துழைத்து வாழ்க.
104. கத்திவெட்டைப் போல் துண்டுபடப் பேசாதே.
105. வேண்டுமென்றே தீயவற்றைச் செய்யாதே.
106. பொழுது விடிவதற்கு முன்பே விழித்து எழு.
107. பகைவர் சொற்கண்டு அவரை நம்பாதே.
108. எந்த வழக்கிலும் ஒரு பக்கமாகப் பேசாதே.

80. புகழ்ந்தாரைப் போற்றிவாழ்
81. பூமி திருத்தியுண்
82. பெரியாரைத் துணைக்கொள்
83. பேதைமை யகற்று
84. பையலோ டிணங்கேல்
85. பொருள்தனைப் போற்றிவாழ்
86. போர்த்தொழில் புரியேல்
87. மனந் தடுமாறேல்
88. மாற்றானுக் கிடங்கொடேல்
89. மிகைபடச் சொல்லேல்
90. மீதூண் விரும்பேல்
91. முனைமுகத்து நில்லேல்
92. மூர்க்கரோ டிணங்கேல்
93. மெல்லினல்லாள் தோள்சேர்
94. மேன்மக்கள் சொற்கேள்
95. மைவிழியார் மனையகல்
96. மொழிவ தறமொழி
97. மோகத் தைமுனி
98. வல்லமை பேசேல்
99. வாதுமுற் கூறேல்
100. வித்தை விரும்பு
101. வீடு பெறநில்
102. உத்தம னாயிரு
103. ஊருடன் கூடிவாழ்
104. வெட்டெனப் பேசேல்
105. வேண்டி வினைசெயேல்
106. வைகறைத் துயிலெழு
107. ஒன்னாரைத் தேறேல்

சிவபெருமானின் திருக்குமரனாம் விநாயகக் கடவுளின் திருவடிகளை நாள்தோறும் வணங்குவோம்.

1. தாயும் தந்தையும் கண்கண்ட தெய்வங்கள்.
2. கோயிலுக்குச் சென்று கடவுளை வணங்குவது மிகவும் நல்லது.
3. மனைவியுடன் வாழ்ந்து செய்யும் அறமே நல்லறமாகும்.
4. கருமிகளின் செல்வத்தைத் தீயவர் எடுத்துக்கொள்வர்.
5. அளவாக உண்பது பெண்களுக்கு அழகைத் தரும்.
6. ஊராருடன் பகைத்துக் கொண்டவன் அடியோடு அழிவான்.
7. கணக்கும் இலக்கியமும் மக்களுக்குக் கண்கள் போன்றவை.
8. சொல்வதற்கு முன் குறிப்பறிந்து செய்யும் மக்கள் அமிழ்தத்தை ஒப்பார்கள்.
9. பிச்சை எடுத்தாயினும் கடமைகளை விடாமற் செய்.
10. சிறந்த ஒருவனைத் துணையாய்க் கொண்டு இல்லறம் நடத்து.
11. வேதம் ஓதுவதிலும் ஒழுக்கமே சிறந்தது.
12. பொறாமை கொண்டால் செல்வம் அழியும்.
13. தானியத்தையும் செல்வத்தையும் வீண் செலவு செய்யாமல் தேடி வை.
14. பெண்களுக்குக் கற்பாவது உறுதியாக இருப்பது.
15. தம்மைத் தாமே காத்துக் கொள்வது பெண்களுக்கு அழகு.
16. விரும்பிய பொருள் கிடைக்காதென்றால் அதனை உடனே மறக்க.
17. உனக்குக் கீழ்ப்பட்டவரிடத்தும் பணிவாகப் பேசு.
18. குற்றத்தையே பார்த்தால் சுற்றமே இருக்காது.
19. கூர்மையான அம்பு கையில் இருந்தாலும் வீராப்புப் பேசாதே.
20. நண்பன் தீங்கே செய்யின் அவன் நட்பை விடுவது நல்லது.
21. பொருளை இழந்தபோது மனம் தளராது இருந்தால் செல்வம்

"சங்கத் தமிழ் மூன்றுந் தா"

# கொன்றை வேந்தன்

## ஔவையார் இயற்றியது

### கடவுள் வணக்கம்

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்று மேத்தித் தொழுவோம் யாமே.

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
2. ஆலயந் தொழுவது சாலவும் நன்று
3. இல்லற மல்லது நல்லற மன்று
4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்
5. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு
6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்
7. எண்ணும் எழுத்துங் கண்ணெனத் தகும்
8. ஏவா மக்கள் மூவா மருந்து
9. ஐயம் புகினுஞ் செய்வன செய்
10. ஒருவனைப் பற்றி ஒரகத் திரு
11. ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்
12. ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு
13. அஃகமுங் காசுஞ் சிக்கெனத் தேடு
14. கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை
15. காவல் தானே பாவையர்க் கழகு
16. கிட்டா தாயின் வெட்டென மற
17. கீழோ ராயினுந் தாழ வுரை
18. குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை
19. கூரம் பாயினும் வீரியம் பேசேல்
20. கெடுவது செய்யின் விடுவது கருமம்
21. கேட்டில் உறுதி கூட்டும் உடைமை

22. கையில் உள்ள செல்வப் பொருளைக் காட்டிலும் கல்விப் பொருளே சிறந்தது.
23. அரசன் அறிந்திருந்தால் துன்பக்காலத்து உதவி கிடைக்கும்.
24. கோள் சொல்லுபவனிடம் போய்ச் சொல்லும் கோள் காற்றுடன் சேர்ந்து நெருப்புப் போலப் பரவும்.
25. பிறர்மேல் பழிச்சொற்களையே சொல்லிக் கொண்டிருப்பவன் எல்லோருக்கும் பகையாவான்.
26. மலடு இல்லாமல் இருப்பது குடிக்கு அழகு.
27. தன் பிள்ளைகள் சிறந்தவர்கள் எனச் சொல்லிக் கேட்பது தாய்க்கு மகிழ்ச்சி.
28. சிவனை வழிபடுதல் ஒருவன் செய்யும் தவத்திற்குச் சிறப்பு.
29. சிறப்பாக வாழ விரும்பின் உழு தொழிலைச் செய்.
30. இன்பத்திலும் துன்பத்திலும் கூடியிருப்பதே சுற்றத்தார்க்கு மேன்மை.
31. வஞ்சகமும் வழக்கும் துன்பத்தை உண்டாக்கும்.
32. செய்ய வேண்டிய தவத்தை மறந்தால் துன்பம் பற்றிக் கொள்ளும்.
33. காவல் செய்யினும் நள்ளிரவில் உறங்க வேண்டும்.
34. இணங்கும் அளவு எப்போதும் பிச்சை அளித்து உண்பாயாக.
35. பொருள் உடையவர் அறம் இன்பம் ஆகிய பேறுகளைப் பெறுவர்.
36. சோம்பல் உடையவர் வறுமையால் வாடி அலைவர்.
37. தந்தை சொல்லைவிட மேலான அறிவுரை இல்லை.
38. தாயைக் காட்டிலும் வேறு கோயில் இல்லை.
39. கப்பல் ஏறி வெளிநாடு சென்றும் பொருளைத் தேடு.
40. தணியாத கோபம் சண்டையில் கொண்டு நிறுத்தும்.
41. குடும்பத்தில் துன்பங்கண்டும் மனம் பதைக்காத பெண் மடியில் கட்டிக்கொண்ட நெருப்பை ஒப்பாள்.
42. கணவன் மேல் பழி சொல்லித் தூற்றும் பெண் அவனுக்கு எமன் ஆவாள்.
43. கடவுளின் வெறுப்புக்கு ஆளானால் செய்த தவப்பயன் அழியும்.
44. செல்வத்தைப் பெருக்காமல் உள்ளதைச் செலவு செய்யின்

22. கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி

23. கொற்றவன் அறிதல் உற்றிடத் துதவி

24. கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு

25. கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை

26. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை

27. சான்றோ ரென்கை யீன்றோட் கழகு

28. சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு

29. சீரைத் தேடின் ஏரைத் தேடு

30. சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்

31. சூதும் வாதும் வேதனை செய்யும்

32. செய்தவம் மறந்தாற் கைதவ மாளும்

33. சேமம் புகினும் யாமத் துறங்கு

34. சையொத் திருந்தால் ஐய மிட்டுண்

35. சொக்கர் என்பவர் அத்தம் பெறுவர்

36. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்

37. தந்தை சொல்மிக்க மந்திர மில்லை

38. தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை

39. திரைகட லோடியுந் திரவியந் தேடு

40. தீராக் கோபம் போராய் முடியும்

41. துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு

42. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்

43. தெய்வம் சீறிற் கைதவ மாளும்

44. தேடா தழிக்கிற் பாடாய் முடியும்

45. பனிபெய்யும் பருவத்தில் வைக்கோலால் வேய்ந்த கூரை வீட்டில் உறங்கு.
46. பிறர்க்கு அடிமை செய்து உண்பதைக் காட்டிலும் தானே உழுது உண்பது இன்பந்தரும்.
47. நண்பனிடங் கூட உன் வறுமை முதலிய எளிமையை வெளிப்படச் சொல்லாதே.
48. தீய நட்பு பெருந் துன்பத்தைத் தரும்.
49. நாடு முழுதும் வாழ்ந்தால் யாருக்கும் துன்பம் இல்லை.
50. நிலைபெறக் கற்றலாவது சொல்லும் சொல் தவறாமையாம்.
51. நீர்வளம் பொருந்திய ஊரின்கண் வாழ்.
52. சிறிய காரியத்தையும் ஆராய்ந்து செய்க.
53. அறநூலில் சொல்லப்பட்ட முறைகளைத் தெரிந்து நல்லவழியில் நட.
54. நம் மனத்திற்குத் தெரியாத வஞ்சகம் இல்லை.
55. மனம் ஒன்றுபடாத தவம் செம்மையாக அமையாது.
56. நலிந்தவரிடத்தும் சிறுமையான சொற்களைக் கூறாதே.
57. உருவத்தால் சிறியவரும் நல்ல காரியத்தால் எல்லோராலும் விரும்பப்படுவர்.
58. எந்த உயிரையும் கொல்லாமையும் அதன் ஊனைத் தின்னாமையுமே விரதமாகும்.
59. பயிர் விளைச்சலின் மூலம் செய்த நன்மை தெரியும்.
60. பால் உணவானாலும் உரியகாலத்திற் குடி.
61. பிறன் மனைவியை விரும்பாமை தலைசிறந்த அறம் ஆகும்.
62. தாய்ப்பால் குடித்து வளர்ந்த குழந்தை எப்பாரத்தையும் தாங்கும்.
63. புலால் உண்ணல், கொலை செய்தல், திருடுதல் ஆகிய குற்றங்களை நீக்கு.
64. கீழ்மக்களிடத்தில் சிறப்பான ஒழுக்கம் அமைவதில்லை.
65. மெய்ஞ்ஞானம் பெற்றவர்க்கு உறவும் இல்லை, வெறுப்பும் இல்லை.
66. அறியாதவர் போல் இருத்தல் பெண்களுக்குச் சிறப்பாகும்.
67. பண்பாக நடந்து கொண்டால் உலகத்தார் பாராட்டுவர்.

45. தையும் மாசியும் வையகத் துறங்கு

46. தொழுதூண் சுவையின் உழுதூ ணினிது

47. தோழ னோடும் ஏழைமை பேசேல்

48. நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்

49. நாடெங்கும் வாழக் கேடொன்றும் மில்லை

50. நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை

51. நீரகம் பொருந்திய ஊர கத்திரு

52. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி

53. நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு

54. நெஞ்சை யொளித்தொரு வஞ்சக மில்லை

55. நேரா நோன்பு சீரா காது

56. நைபவ ரெனினும் நொய்ய வுரையேல்

57. நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்

58. நோன்பென் பதுவே கொன்று தின்னாமை

59. பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்

60. பாலோ டாயினுங் காலம் அறிந்துண்

61. பிறன்மனை புகாமை அறமெனத் தகும்.

62. பீரம் பேணிற் பாரந் தாங்கும்

63. புலையுங் கொலையுங் களவுந் தவிர்

64. பூரியோர்க் கில்லை சீரிய வொழுக்கம்

65. பெற்றோர்க் கில்லை சுற்றமுஞ் சினமும்

66. பேதைமை என்பது மாதர்க் கணிகலன்

67. பையச் சென்றால் வையந் தாங்கும்

68. தீயன என்று கூறும் அனைத்தையும் நீக்கிவிடு.

69. உழைத்து உண்ணும் உணவே சிறந்த உணவாகும்.

70. அமுத மாயினும் விருந்தினரோடு சாப்பிடு.

71. மழை பெய்யாவிடில் உலகில் ஒரு செயலும் நடக்காது.

72. முன்னே மின்னல், பின்னே மழை, முன்னே முயற்சி, பின்னே இன்பம்.

73. மாலுமி இல்லாமல் கப்பல் ஓடாது, தலைவன் இல்லாத குடும்பம் சிறப்பாக நடவாது.

74. முற்பகலில் நாம் பிறர்க்கு நன்மையோ தீங்கோ செய்தால் பிற்பகலில் நன்மையோ தீங்கோ நமக்கு வரும்.

75. பெரியோர் சொன்ன அறிவுரை அமுதம் போல் இன்பமாகும்.

76. பஞ்சணையிற் படுத்தல் நல்ல உறக்கம் தரும்.

77. உழவால் வரும் செல்வம் என்றும் குறையாது.

78. பரத்தையர் வீட்டை அணுகாமல் விலகித் தூர நட.

79. பெரியோர் சொல்வதைக் கேட்க மறுத்தால் அழிவது நிச்சயம்.

80. பேச்சும் மனமும் அடங்கிய நிலையே ஞானத்தின் எல்லையாகும்.

81. வளம் மிக்கவன் ஆயினும் வரவுக்கு ஏற்பச் செலவழித்து உண்ண வேண்டும்.

82. மழை குறைந்தால் கொடையும் குறையும்.

83. விருந்து செய்யாதவர்கட்கு இல்லறம் சிறக்காது.

84. வீரனது நட்பு அம்புபோல் விரைந்து உதவும்.

85. பிறரிடம் சென்று ஒன்றையும் கேட்காத உழைப்பாளரே வலியோர் ஆவர்.

86. மனம் தளராமை எல்லா முன்னேற்றமும் தரும்.

87. தூய மனமுடையவரிடத்தில் வஞ்சகம் தோன்றாது.

88. அரசன் கோபித்தால் யாரிடமும் உதவி கிடைக்காது.

89. நாள்தோறும் எழுந்தவுடன் தெய்வத்தை வணங்கு.

90. நல்ல காற்றோடும் இடத்தில் நித்திரை செய்.

91. முறையாகப் படிக்காதவருக்குச் சிறந்த அறிவும் ஒழுக்கமும் உண்டாவதில்லை.

68. பொல்லாங்கு என்பவை யெல்லாந் தவிர்

69. போனக மென்பது தானுழந் துண்டல்

70. மருந்தே யாயினும் விருந்தோ டுண்

71. மாரி யல்லது காரிய மில்லை

72. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை

73. மீகாம னில்லா மரக்கல மோடாது

74. முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்

75. மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்

76. மெத்தையிற் படுத்தல் நித்திரைக் கழகு

77. மேழிச் செல்வங் கோழை படாது

78. மைவிழி யார்தம் மனையகன் றொழுகு

79. மொழிவது மறுக்கின் அழிவது கருமம்

80. மோன மென்பது ஞான வரம்பு

81. வளவ னாயினும் அளவறிந் தழித்துண்

82. வானஞ் சுருங்கின் தானஞ் சுருங்கும்

83. விருந்திலோர்க் கில்லை பொருந்திய வொழுக்கம்

84. வீரன் கேண்மை கூரம் பாகும்

85. உரவோ ரென்கை யிரவா திருத்தல்

86. ஊக்க முடைமை ஆக்கத்திற் கழகு

87. வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை

88. வேந்தன் சீறின் ஆந்துணை இல்லை

89. வைகல் தோறும் தெய்வந் தொழு

90. ஒத்த விடத்து நித்தி ரைகொள்

91. ஓதாதார்க் கில்லை உணர்வொடு ஒழுக்கம்

வலிமை பொருந்திய அழகிய உடலினையும் தும்பிக்கையையும் உடைய விநாயகக் கடவுளின் திருவடிகளை மலர் கொண்டு வழிபாடு செய்பவர்க்குச் சொல்வளம் உண்டாகும்; இலக்குமியின் கருணையால் செல்வம் உண்டாகும்; உடல் நலமும் உண்டாகும்.

1. தென்னைமரம் வேரால் உண்ட நீரை இனிய சுவையுடைய இளநீராக்கி முடியாலே தருகின்றது. அது போல, நாம் பிறர்க்குச் செய்யும் உதவி நமக்குத் தவறாமல் வந்து சேரும். ஆதலால் என்றும் நன்மையே செய்க.

2. பிறர் தமக்குச் செய்த உதவியை நல்லோர் தம் உயிர் உள்ளளவும் மறக்க மாட்டார். பிறர் தமக்குச் செய்த உதவியைத் தீயோர் நீர்மேல் எழுத்துப் போல் உடனே மறந்து விடுவர்.

3. காலமல்லாத காலத்தில் பூத்த மலரும் கணவன் இல்லாத பெண்ணின் அழகும் பயன்படாவாம். அவை போல். இளமையில் வறுமையும் முதுமையிற் செல்வமும் பயன்படாவாம்; துன்பம் செய்யும்.

4. பாலைத் தீயிலிட்டுக் காய்ச்சினாலும் சுவை குறையாது. சங்கினைச் சுட்டு நீறாக்கினாலும் தன் வெண்மை நிறத்தையே தரும். அவைபோல மேன்மக்கள் துன்பம் வந்த போதும், தம் உயர் குணத்தினின்றும் மாறுபடார்; கீழோர் கலந்து பழகினாலும் நண்பர் ஆகார்.

5. கிளைத்துத் தழைத்த வளமான மரங்களாயினும் அவை பழுக்குங்காலம் வந்தாலன்றிப் பழுக்க மாட்டா. அது போல, கைகூடும் காலம் வந்தாலன்றி, எச்செயலும் எவ்வளவு முயன்றாலும் கை கூடாது; ஆகையால் காலமறிந்து செய்க.

6. கல்லால் ஆகிய தூண் பெரும் பாரம் தாங்க நேர்ந்தால் வளையாமல் பிளந்து முறியும். அதுபோல, மானம் உடையோர் மானக்கேடு வருமிடத்து உயிரை விட்டு மானத்தைக் காப்பர்.

"சங்கத் தமிழ் மூன்றுந் தா"

# மூதுரை

## ஔவையார் இயற்றியது.

### கடவுள் வாழ்த்து

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

### நன்மை செய்தால் நன்மை வரும்

1. நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்.

### நல்லோர்க்குச் செய்த உதவி நிலையாக நிற்கும்

2. நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே - அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்.

### இளமையில் வறுமை

3. இன்னா இளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா அளவில் இனியவும் - இன்னாத
நாளல்லா நாட்புத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு

### மேன்மக்கள் இயல்பு

4. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் - நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

### காலமறிந்து செய்தல்

5. அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா - தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

### உயிரினும் மானம் பெரிது

6. உற்ற இடத்தில் உயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ - கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்.

7. நீரினது உயரத்தின் அளவே அல்லிக் கொடி இருக்கும். அதுபோல ஒருவர்க்கு அவர் கற்ற நூலின் அளவே அறிவு அமையும்; செய்த தவத்தின் அளவே செல்வம் அமையும்; பிறந்த குடியின் இயல்புக்கு ஏற்றவாறே குணம் அமையும்.

8. நல்லவரைக் காண்பதும் அவர் சொற்களைக் கேட்பதும் நன்மையாகும்; அவருடைய நல்ல குணங்களைப் பேசுவதும் அவரோடு கூடியிருப்பதும் நல்லறிவும் நல்லொழுக்கமும் தரும்.

9. தீயவர்களைக் காண்பதும் அவர்கள் சொற்படி நடத்தலும் தீமையாகும். தீயவர்களின் குணங்களைப் பேசுவதும் அவர்களுடன் நட்புக் கொள்ளுதலும் தீமையாய் முடியும்.

10. நெல்லுக்கு இறைத்த நீரால் புல்லும் வளம்பெறும். அதுபோல நல்லோரைச் சார்ந்த எல்லோரும் பயனடைவர்.

11. முன்னே முளைப்பது அரிசியேயானாலும் உமி நீங்கி விடின் அரிசி முளைக்காது. ஆதலால் வல்லமை உடையார்க்கும் துணைவலிமையில்லாமல் எடுத்த காரியத்தைச் செய்ய முடியாது.

12. பெரிய இதழையுடைய தாழைக்கு மணம் இல்லை; உருவத்தில் சிறிய மகிழம்பூ இனிய மணம் உடையது. கடல் உருவத்தால் பெரியது; எனினும் அதன் நீரில் குளிக்கவும் முடியாது. கடல் அருகில் உள்ள சிறிய ஊற்று நீர் குளிப்பதற்கே அன்றிக் குடிக்கவும் பயன்படும். ஆதலால் தோற்றத்தால் பெரியவர் குணத்தால் சிறியராதலும் தோற்றத்தால் சிறியவர் குணத்தால் பெரியவராதலும் உண்டு.

13. காட்டில் வளர்ந்து நிற்கும் மரங்களைக் காட்டிலும் படிப்பறிவு இல்லாதவனும் ஒருவருடைய குறிப்பை அறியாதவனும் நல்ல மரங்களாவர். காரணம் மனித மரங்கள் பார்க்கும், நடக்கும், பேசும்.

14. வான்கோழி தன்னை மயிலாக நினைத்து ஆடினாலும் மயிலாகாது. அதுபோலக் கல்லாதவன் கற்பவர்போல் நடித்தாலும் கற்றவன் ஆகான்.

### அறிவு செல்வம் குணம் அமைதல்

7. நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு - மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுமாம் குணம்.

### நல்லார் தொடர்பால் வரும் நன்மை

8. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே - நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் நன்று.

### தீயவர் தொடர்பால் வரும் தீமை

9. தீயாரைக் காண்பதும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே - தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் தீது.

### நல்லோரால் எல்லார்க்கும் நன்மை

10. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் - தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்(டு)
எல்லார்க்கும் பெய்யு மழை.

### துணை வலிமை வேண்டும்

11. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் - கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்

### உருவமும் குணமும்

12. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா - கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

### கல்லாதவன் காட்டுமரமாவான்

13. சுவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் - சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நன் மரம்.

### போலி அறிவின் இழிவு

14. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் - தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே

15. வேங்கைப் புலியின் நோயைத் தீர்த்த விட வைத்தியன் அப்பொழுதே அப்புலிக்கு இரையாவாற்போல, தீயவர்க்கு உதவி செய்யின் அவர் தமக்குச் செய்த உதவியை மறந்து அப்பொழுதே கேடு செய்வர்.

16. கொக்கு தனக்கேற்ற பெரியமீன் வருமளவும் அமைதியாக இருப்பது போலப் பெரியவர்களும் தமக்கு ஏற்ற காலம் வரும் வரை அடங்கியிருப்பார்கள். அடக்கத்தை அறியாமை என்று நினைத்து அவர்களை வெல்ல நினைப்பவன் தோற்றுப் போவான்.

17. நீர்வற்றியவுடன் குளத்தினின்று நீங்கிப் போகும் நீர்ப்பறவை போன்று நமக்குத் துன்பம் வரும்போது நம்மை விட்டு நீங்குபவர் உண்மையான உறவினர் ஆகார். அக்குளத்தில் உள்ள கொட்டியும், அல்லியும், நெய்தலும் போலத் துன்பத்தி லும் பங்கு கொள்பவரே உண்மையான உறவினர் ஆவார்.

18. பொற்குடம் உடைந்தாலும் பொன்னாகிப் பயன் தரும். அதுபோல் மேன்மக்கள் வறுமை அடைந்தாலும் மேன்மைக் குணத்திலிருந்து மாறுபடார். மண்ணால் ஆகிய குடம் உடைந் தால் ஒன்றுக்கும் பயன்படாது. அதுபோல, கீழோர் வறுமை அடைந்தால் மேலும் கீழ்மைக் குணம் உடையவராவர்.

19. அளவற்ற நீர் உடைய கடலுள் ஒரு படியை ஆழ அமுக்கி முகந்தாலும் அது நாலுபடி நீரை மொள்ளாது. அதுபோல, ஒரு பெண்ணுக்கு மிக்க பொருளும் தக்க கணவனும் கிடைத்தாலும் பழவினையின் அளவன்றி மிகுதியாய்த் துய்க்க முடியாது.

20. உடம்புடன் பிறந்த நோயே உடலை அழிப்பது போல உடன் பிறந்தவர்களே நமக்குத் தீங்கு செய்வதுண்டு. நமக்குத் தொடர் பில்லாத மலையில் தோன்றிய மருந்து நம் நோயைத் தீர்ப்பது போல, நமக்கு அயலவர்களால் நன்மை விளைவதும் உண்டு.

21. நற்குணமும் நற்செயலும் உடைய மனையாள் வாழும் வீட்டில் எல்லா நன்மையும் நிறைந்திருக்கும். மனைவி இல்லாவிடினும், மனைவி கடுஞ் சொற்களைப் பேசுபவளாக இருப்பினும், அவ்வீடு புலி வாழும் புதருக்கு ஒப்பாகும்.

22. நல்ல பயனைப் பெறலாம் என்று நினைத்துக் கற்பக மரத்தை அடைந்தோர்க்கு அது கொடிய கசப்புடைய எட்டிக் காயைக் கொடுக்குமாயின் அதற்குக் காரணம் முற்பிறப்ஃபிற் செய்த தீவினையேயாகும். ஆதலால் மனமே, நீ நினைத்தபடி

### தீயோர்க்கு உதவின் தீங்கே வரும்

15. வெங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல் - பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம்

### அடக்கத்தை இகழாதே

16. அடக்க முடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு.

### உண்மையான உறவினர்

17. அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் - அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு.

### கெட்டாலும் மேன்மக்கள் குணம் மாறார்

18. சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும் - சீரிய
பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்.

### ஆசையாற் பயனில்லை

19. ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி - தோழி
நிதியுங் கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன்.

### உடன்பிறப்பும் அயலாரும்

20. உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி - உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரு முண்டு.

### மனையாளும் மனையும்

21. இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே யாமாயின் - இல்லாள்
வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்.

### ஊழின்படியே நடக்கும்

22. எழுதியவா றேகாண் இரங்குமட நெஞ்சே
கருதியவா றாமோ கருமம் - கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்
முற்பவத்திற் செய்த வினை.

23. கோபத்தினால் வேறுபட்ட விடத்துக் கீழ்மக்கள் கல்லின் பிளவைப் போல் மீண்டும் ஒன்று கூடார்; இடையாயர் பொன்னின் பிளவைப் போல் ஒருவர் கூட்டக் கூடுவர்; சான்றோர் நீரின் பிளவு போலப் பிரிந்த உடனே தாமே கூடுவர்.

24. தாமரைப்பூவை அன்னம் சேர்ந்தாற் போலக் கற்றவரைக் கற்றவரே விரும்புவர், இடுகாட்டில் உள்ள பிணத்தைக் காக்கை விரும்புவது போலக் கல்வியில்லாத மூடரை மூடரே விரும்புவர்.

25. நஞ்சுடைய நாகப்பாம்பு மறைந்து வசிக்கும். அது போல நெஞ்சில் வஞ்சனையுடையவர் தம்மை ஒளித்து ஒழுகுவர். நஞ்சில்லாத தண்ணீர்ப் பாம்பு அஞ்சாமல் கிடக்கும். அதுபோல வஞ்சனையில்லாதவர் வெளிப்படையாக ஒழுகுவர்.

26. அரசனுக்கு அவன் நாட்டில் மட்டும் சிறப்பு உண்டு. கற்றோர்க்கு அவர் செல்லும் எல்லா நாடுகளிலும் சிறப்பு உண்டு. ஆதலால் மன்னனினும் கற்றவர்க்கே சிறப்பு மிகுதி.

27. படியாதவர்க்குப் படித்தவரின் உறுதி மொழிகளும். அறநெறியில் நில்லாதவர்க்கு அறமும், வாழை மரத்திற்கு அது ஈன்ற காயும், கணவனுக்கு இல்வாழ்க்கையில் ஒத்து நடவாத மனைவியும் எமன்களாகும்.

28. சந்தனக்கட்டை தேய்ந்தவிடத்தும் மணத்தில் குறையாது. அதுபோல அரசர் செல்வக் குறைவு நேர்ந்தபோதும் பிறர்க்கு உதவும் குணத்தில் குறையார்.

29. திருமகள் நம்மை வந்தடையும் போது சுற்றமும் செல்வமும், நல்ல உருவமும், உயர்வான குடிப்பிறப்பும் வந்தடையும். அவள் நீங்கிப் போய்விடின் அனைத்தும் நீங்கிவிடும். ஆதலால் அவை நிலையற்றவை.

30. ஒருவன் தன்னை வெட்டும் போதும் அவனுக்கு நிழல் தந்து வெயிலை மறைக்கும் மரம். அதுபோல் அறிவுடையோர் தமக்குத் தீங்கு செய்பவர்க்கும் தம்மாலான உதவியைச் செய்வர்.

## சினத்தில் மூவகை நிலை

23. கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வரே - விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.

## குணமும் தொடர்பும்

24. நற்றா மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் - கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்.

## வஞ்சனையுடையார் ஒளிந்து இருப்பர்

25. நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு - நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.

## கற்றோர் சிறப்பு

26. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் - மன்னற்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு

## நால்வகை எமன்கள்

27. கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறங்கூற்றம் - மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்.

## கேட்டிலும் பண்பு கெடாமை

28. சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால் - தந்தம்
தனஞ்சிறிய ராயினும் தார்வேந்தர் கெட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று.

## நிலையில்லாத வாழ்வு

29. மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம் - திருமடந்தை
ஆம்போ தவளோடு மாகும் அவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம்.

## துன்பம் செய்வார்க்கும் இன்பம் செய்தல்

30. சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர் - மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்.

விநாயகப் பெருமானே! பாலும் தேனும் வெல்லப் பாகும் பருப்பும் ஆகிய நான்கு பொருட்களை உனக்குப் படைப்பேன். எனக்கு இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் தர வேண்டுகிறேன்.

1. புண்ணியத்தால் வாழ்வும் பாவத்தால் தாழ்வும் உண்டாகும். ஒருவன் செய்யும் புண்ணிய பாவங்களே அவன் எதிர்காலச் சேமிப்பு ஆகும். எல்லாச் சமயத்தார்களும் சொல்வது இக்கருத்தே. ஆதலால் பாவத்தை நீக்கிப் புண்ணியம் செய்க.

2. துன்பப் படுவோர்க்குக் கொடுத்து உதவுபவர் உயர் குலத்தார் ஆவர். அங்ஙனம் கொடாதவர் தாழ்ந்த குலத்தவர் ஆவர். உண்மை நூலில் சொல்லப்பட்ட கருத்தும் இதுவேயாகும். ஆதலால் பிறவியினால் உயர்வு தாழ்வு இல்லை.

3. துன்பத்தின் இருப்பிடமான இந்த அழியும் உடம்பை மெய் என்று கருதி இராமல், விரைந்து அறம் செய்ய வேண்டும். அறம் செய்யின் வீடுபேறு கிட்டும்.

4. நற்காலம் இல்லாவிடின் திட்டமிட்டுச் செய்யும் காரியமும் நடைபெறாது. நற்காலம் நேரின், கண்ணில்லாதவன் குறிபாராமல் மாமரத்தில் எறிந்த கோலினால் மாங்காய் விழுதல் போல, திட்டமிடாத செயலும் கைகூடும்.

5. ஊழால் வாராதனவற்றை விரும்பி அழைத்தாலும் வரமாட்டா. ஊழால். வரக்கூடியவற்றைப் போமின் என்று வெறுத்தாலும் போகமாட்டா. ஆதலால் இன்பத்தை விரும்பியும் துன்பதை வெறுத்தும் கவலை அடைதல் கூடாது.

6. திரைகடல் ஓடி அளவில்லாமல் பொருள் தேடி வந்தாலும் விதிப்படிதான் ஒருவர் நுகர முடியும். இதனை உணர்ந்து பேராசை கொள்ளாமல் வாழ வேண்டும்.

"சங்கத் தமிழ் மூன்றுந் தா"

# நல்வழி

## ஔவையார் இயற்றியது

### கடவுள் வாழ்த்து

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா.

### நன்மையே செய்க

1. புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள் - எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.

### உயர்குலம் இழிகுலம்

2. சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின் - மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.

### ஈகை பயன் வீடுபேறு

3. இடும்பைக் கிடும்பை இயலுடம்பி தென்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே - இடுங்கடுக
உண்டாயின் உண்டாகும் ஊழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

### காலம் அறிந்து செய்க

4. எண்ணி ஒருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்தும் போதல்லாற் - கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோல் ஒக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு.

### கவலையடைதல் கூடாது

5. வருந்தி அழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா - இருந்தேங்கி
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

### பேராசை கூடாது

6. உள்ள தொழிய ஒருவர்க் கொருசுகமுங்
கொள்ளக் கிடையா குவலயத்தில் - வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழும் உயிர்க்கு

7. உடம்பு நோய்களும் புழுக்களும் நிறைந்த இழிவுடையது; இத்தன்மையை ஞானிகள் அறிந்திருப்பர். ஆதலால் தாமரை இலையில் தண்ணீர் போல உடம்பின் மீது பற்றற்று இருப்பர்.

8. அளவற்ற பொருள்தேடி வைத்தாலும் ஊழினளவே நமக்குப் பயன்படும். மேலும் செல்வமோ நிலையற்றது. என்றும் நிலைபெறும் நல்லொழுக்கத்தையே தேட வேண்டும்.

9. ஆறு வற்றி வறண்ட காலத்தும் ஊற்று நீரால் உலகத்தவரை உண்பிக்கும். அதுபோல நல்ல குடியிற் பிறந்தவர் வறுமையடைந்த காலத்தும் தம்மால் இயன்ற அளவு பிறர்க்கு உதவுவர்.

10. இறந்தவர்க்காகப் பல்லாண்டுகள் அழுதாலும் அவர் திரும்பி வரமாட்டார். நாமும் ஒரு நாள் இறப்பது உறுதி. ஆதலால் இறப்பதற்குள் அறஞ்செய்து உண்டு கவலையற்று வாழ்தல் சிறப்பாகும்.

11. வயிறே, உணவு கிடைக்காத போது ஒரு நாளைக்கு உணவை விட்டிரு என்று சொன்னால் விடமாட்டாய்; உணவு கிடைத்த போது இரண்டு நாளைக்குச் சேர்த்து ஏற்றுக்கொள் என்றால் ஏற்றுக் கொள்ளாய். உணவின் பொருட்டு நான்படும் துன்பங்களைச் சிறிதும் நீ அறியமாட்டாய். உன்னோடு வாழ்தல் மிகவும் கடினம்.

12. உழுது பயிர் செய்து வாழும் வாழ்க்கையே உரிமை உடையது. உயர்வுடையது. அரசாட்சி போன்ற பிற பணிகள் உரிமையற்றவை; குற்றம் வருவதற்கு வாய்ப்பு உடையவை.

13. உலகில் வாழ்வதற்கு உரியவரை அழிப்பதும், அழிதற்குரியாரை அழியாமல் தடுப்பதும், ஒழியாமல் பிச்சை எடுப்போரைத் தடுப்பதும் நம் கையில் இல்லை. எல்லாம் ஊழின் வழியே நடக்கும்.

## ஞானிகள் பற்றற்று இருப்பர்

7. எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை - நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆங்கமல நீர்போற்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

## ஒழுக்கம் பொருளினும் சிறந்தது.

8. ஈட்டும் பொருள்முயற்சி எண்ணிறந்த வாயினும்
கூட்டும் பயனன்றிக் கூடாவாம் - தேட்டம்
மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணும் தனம்.

## குடிப்பிறந்தார் வறுமையிலும் உதவுவர்

9. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளும்மவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து.

## கொடுத்து உண்டு வாழ்க

10. ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் - வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

## வயிற்றின் கொடுமை

11. ஒருநாள் உணவையொழி யென்றால் ஒழியாய்
இருநாளைக் கேலென்றால் ஏலாய் - ஒருநாளும்
என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்த லரிது.

## உழவின் உயர்வு

12. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே - ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

## நம்மால் விலக்க இயலாதன

13. ஆவாரை யாரே அழிப்பர் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர் - ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்

14. பிச்சை எடுத்து உண்பதிலும் இழிவானது பிறரிடத்தில் ஆசை வார்த்தைகள் பேசி மானமின்றி வாங்கி உண்ணுதலாம். மானம் இழந்து உயிர் வாழ்தலினும் உயிர் விட்டு மானத்தைக் காத்தல் சிறப்புடையது.

15. 'சிவாயநம' என்னும் திருவைந்தெழுத்தை இடையறாமல் நினைத்திருப்போர்க்கு ஒரு நாளும் துன்பம் வராது. விதியை வெல்லுவதற்கு இதுவே வழியாகும். ஏனையோர் விதியால் வெல்லப்படுவர்.

16. நிலத்தினது நலத்தால் தண்ணீருக்கும், கொடைக்குணத்தால் நல்லோருக்கும், மாறாத கருணையால் கண்களுக்கும், கற்பொழுக்கத்தால் பெண்களுக்கும் வியக்கத் தகுந்த பெருமை உண்டாகும்.

17. அறம் செய்தால் பாவம் நீங்கும் என்பதை உணராது அக்காலத்தில் அறம் செய்யாதவர்கள் இப்போது வறுமையால் வாடுகிறார்கள். அவர்களுடைய வறுமைக்குக் காரணம் அவர்கள் செய்த தீவினையாகும் என்பதை உணராது தெய்வத்தை நோவதால் பயனில்லை.

18. கஞ்சத்தனம் உடைய கருமிகள் தம்மைத் துன்புறுத்துவோர்க்கே கொடுத்து உதவுவர்; தமக்கு உதவும் பெற்றோர், பிள்ளைகள், சுற்றத்தார் முதலியவர்க்குக் கொடுக்கமாட்டார்.

19. வயிற்றுப் பசியைத் தணிப்பதற்கு வேண்டும் உணவு தேடுவதிலேயே நம் ஆயுட்கால மெல்லாம் கழிகிறது. பெறுதற்கு அரிய உடலைப் பெற்ற நாம் அது கொண்டு பேரின்பம் பெற முயல வேண்டும்.

20. விலைமகளிரைச் சேர்பவன் அம்மிக் கல்லைத் துணையாகக் கொண்டு ஆற்றில் இறங்கியவனைப் போல் தான் கருதிய இன்பத்தை அடையமாட்டான். வறுமையையும் பழி பாவங்களையும் அடைந்து இம்மை மறுமைகளில் துன்புறுவான்.

## மானமே உயிரினும் சிறந்தது

14. பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை - சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
உயிர்விடுகை சால உறும்.

## சிவாய நம

15. சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்(கு)
அபாயம் ஒருநாளும் இல்லை - உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்

## வியத்தகு மேன்மை

16. தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணங்கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால் - பெண்ணீர்மை
கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமா மென்றே யறி.

## தீவினையே வறுமைக்கு வித்து

17. செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம் - வையத்து
அறும்பாவம் என்னவறிந்(து) அன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்.

## அடிப்பவர்க்கே கொடுப்பர்

18. பெற்றோர் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார் - மற்றோர்
இரணங் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணங் கொடுத்தாலுந் தாம்.

## உயர் நோக்கம் இன்மை

19. சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் - போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம்.

## விலைமகள் தொடர்பு

20. அம்மி துணையாக ஆறழிந்த வாறொக்கும்
கொம்மை முலைபகர்வார்க் கொண்டாட்டம் - இம்மை
மறுமைக்கும் நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கும் வித்தாய் விடும்.

21. வஞ்சனையில்லாதவர்களுக்குத் திருமகளின் அருளால் நீர்வளமும் நிலவளமும் நல்ல விளைச்சலும் பேரும் புகழும் வளமான செல்வமும் வாழ்நாளும் உண்டாகும்.

22. வருந்தி உழைத்துப் பொருள் சேர்த்து உண்ணாமலும் அறஞ்செய்யாமலும் பொருளை மறைத்து வைக்கும் பாவிகளே! நீங்கள் இறந்தபின் அப்பொருளை யார் அனுபவிப்பர்? அவ்வளவும் வீணே.

23. நீதிமன்றத்தில் ஒரு சார்பாகப் பொய் சொன்னவன் வீட்டில் பேய் சேரும்; எருக்கஞ்செடி வளரும்; பாதாள மூலி என்னும் கொடி படரும்; மூதேவி தங்குவாள். பாம்பு குடியிருக்கும். அதாவது அவன் குடியோடு அழிவான்.

24. திருநீற்றால் நெற்றியும் நெய்யினால் உணவும் ஆற்றினால் ஊரும் உடன்பிறப்பால் உடம்பும் மனைவியினால் வீடும் மாண்பு பெறும்.

25. வரவுக்கு அதிகமாகச் செலவு செய்பவன் மானமும் அறிவும் கெட்டுப் பழி பாவங்களுக்கு ஆளாவான். நல்லவர்களாலும் வெறுக்கப்படுவான்.

26. மானம், குடிப்பிறப்பு, கல்வி, ஈகை, அறிவுடைமை, பதவி, தவம், உயர்வு, தொழில் முயற்சி, காதல் ஆகிய பத்தும் பசி வந்தால் பறந்து போகும்.

27. ஒரு பொருளைப் பெற நினைப்பின் அது கிடைக்காமல் வேறோரு பொருள் கிடைக்கலாம். அப்படியல்லாமல் நினைத்த பொருளும் கிடைக்கலாம். நினையாத ஒன்று கிடைத்தாலும் கிடைக்கும். இவை யாவும் இறைவன் செயல். இறைவன் கருத்துப்படியே எல்லாம் நடக்கும். நாம் நினைக்கின்றபடி ஒன்றும் நடவாது.

### வஞ்சனையில்லார்க்கு வாழ்வு சிறக்கும்

21. நீரும் நிலமும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும் - ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான்.

### புதைத்த பணத்தால் யாருக்குப் பலன்

22. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் - கூடுவிட்டிங்(கு)
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பர்
பாவிகாள் அந்தப் பணம்.

### வழக்கில் ஓரம் சொன்னவர் மனைபாழ்

23. வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே - மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை.

### வாழ்க்கை மாண்பு ஐந்து

24. நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக் கழகுபாழ் - பாரில்
உடன்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை.

### வரவுக் கேற்ற செலவு

25. ஆன முதலில் அதிகஞ் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப் - போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

### பசி வந்திடப் பத்தும் போகும்.

26. மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை - தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்.

### எல்லாம் இறைவன் செயல்

27. ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.

21

. ஒரு நாளில் உண்பது ஒரு படியரிசிச் சோறு; உடுப்பது நான்கு முழ ஆடை; ஆனால் எண்ணுவதோ எண்பது கோடி நினைவுகள். மெய்யறிவில்லாத இத்தகைய மக்கள் அமைதியில்லாமல் துன்பமே அடைவார்கள். ஆதலால் மனவமைதி வேண்டும்.

29. மரம் பழுத்தால் யாரும் அழைக்காமல் வௌவால் அம்மரத்தை வந்தடையும். கறவைப்பசு தன்னிடம் உள்ள பாலை ஒளிக்காமல் கொடுப்பது போலத் தம்மிடம் உள்ள பொருளை ஒளிக்காமல் கொடுப்பவர்க்கு எல்லோரும் உறவினர்கள்.

30. முற்பிறவியில் செய்த நன்மை தீமைகளைப் பிரமன் விதித்தபடியே இப்பிறவியில் அனுபவிக்க வேண்டும். தீவினையால் தூண்டப்பட்டு நமக்குத் தீங்கு செய்தவரை நாம் என்ன செய்யமுடியும்? ஊரில் உள்ளோர் அனைவரும் ஒன்றாகக் கூடி வெறுத்தாலும் விதி போகாது.

31. இலக்கணப்பிழை உடைய பாட்டினும் உரைநடை சிறந்தது; உயர்குடிப் பிறப்பைக்காட்டிலும் ஒழுக்கம் சிறந்தது; தவறுதல் உடைய வீரத்தைக் காட்டிலும் தீராத நோய் நல்லது; குடிக்குவரும் பழிக்கு அஞ்சாத மனைவியுடன் கூடி வாழ்தலினும் தனிமை நல்லது.

32. ஆற்றுவெள்ளத்தினால் உண்டாகும் மேடும் பள்ளமும் போலச் செல்வம் வளரும், குறையும். ஆதலால் வந்து இரப்பவர்க்குச் சோறு இடுங்கள்; தண்ணீரும் கொடுங்கள். அதனால் மனம் தூய்மையுற்று விளங்கும்.

33. வல்லமை பொருந்திய யானையின் உடலில் தைக்கும் அம்பு மெல்லிய பஞ்சில் பாயாது. நீண்ட இருப்புப் பாரைக்குப் பிளவாத கருங்கற் பாறையானது பசுமரத்தின் வேருக்குப் பிளந்து போகும். அவ்வாறே இன்சொற்களை வன்சொற்கள் வெல்லாவாம். இன்சொற்களே வெல்லும்.

34. கல்லாதவனே யாயினும் பொருள் உடையவனாயின் எல்லோரும் அவனை வரவேற்றுப் பாராட்டுவர். கற்றவனேயாயினும் பொருள் இல்லாதவனை மனைவியும் விரும்பமாட்டாள். பெற்ற தாயும் விரும்ப மாட்டாள். அவன் சொல்லை யாரும் மதிக்க மாட்டார்.

## மனவமைதி வேண்டும்

28. உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன - கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும் சஞ்சலமே தான்.

## கொடையாளருக்கு எல்லோரும் உறவினர்

29. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை - சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.

## விதியின் தன்மை

30. தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பர்
பூந்தா மரையோன் பொறிவழியே - வேந்தே
ஒறுத்தாரை யென்செயலாம் ஊரெல்லாம் ஒன்றா
வெறுத்தாலும் போமோ விதி.

## இதனினும் இது நன்று

31. இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சாலும்
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று - வழுக்குடைய
வீரத்தின் நன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தின் நன்று தனி.

## பொருள் இருக்கும்போதே அறம் செய்க

32. ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் - சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

## வன்சொல்லும் இன்சொல்லும்

33. வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது - நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

## பொருளில்லாருக்கு இவ்வுலகம் இல்லை

34. கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர் - இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற்(று) ஈன்றெடுத்த தாய் வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

35. மரங்களில் பூக்காமல் காய்க்கின்ற மரங்கள் இருப்பது போல மக்களுள்ளும் பிறர் ஏவாமல் தாமே அறிந்து செய்ய வல்லவரும் உண்டு. நன்றாகப் பயன்படுத்தி விதைத்தாலும் முளைத்துப் பயன்தராத விதைகள் போல மூடனுக்கு விளங்குமாறு எடுத்துச் சொன்னாலும் அறிவு உண்டாகாது.

36. நண்டும் சிப்பியும் மூங்கிலும் வாழையும் தாம் அழிவை அடையும் காலத்தில் கருக்களை ஈனும். அவை போல ஒருவன் தன் மனைவியையன்றிப் பிற மகளிரை இச்சிப்பது அவனிடத்துள்ள ஞானம், செல்வம், கல்வி என்னும் மூன்றும் அழிவதற்கு அறிகுறியாம்.

37. இருவினைப் பயன்களை வெல்வதற்கு வேதம் முதலான நூல்களிலும் விதியில்லை. எனினும் நெஞ்சமே அதற்காகக் கவலைப்படாதே. வீடு அடைவதற்கு அவரவர் நிலைக்கு ஏற்றவாறு அமையும் சாதனங்களே உறுதுணையாகும்.

38. அது நல்லது; இது தீயது; இதை நான் செய்தேன்; இதை அவன் செய்தான்; இது ஆகாது; இது ஆகும் என வேறுபடுத்தாமல் ஆன்மாவாகிய தான் தலைவனாகிய இறைவனுடன் ஒன்றுபட்டு நின்ற நிலையே உயிர்பெற வேண்டிய உண்மை நிலையாகும். தன்னின் வேறாக நினைத்துக் கடவுளைத் தேடுவது சம்புபுல் அறுத்தோன் அதனைக் கட்டுவதற்கு அதுவே கயிறாகும் என்பதை உணராமல் வேறு கயிறு தேடுவதை ஒக்கும்.

39. முப்பது வயதில் விருப்பு, வெறுப்பு, அறியாமை ஆகிய முக்குற்றம் நீங்கப் பெற்று மெய்ப்பொருளாகிய இறையுணர்வை அடைந்து இன்புறவேண்டும். இல்லாவிட்டால் கல்விக்குப் பயனில்லை. கணவன் இல்லாமல் பெண்கள் மூப்படைந்து என்ன பயன்?

40. திருக்குறள், உபநிடதம், தேவாரம், திருக்கோவை, திருவாசகம், திருமந்திரம் ஆகிய நூல்கள் ஒரு பொருளையே சொல்லுவன. இந்நூல்கள் கற்கத் தக்கவை என்று அறி.

## அறிவுடை.யோரும் பேதையும்

35. பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே - தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்(கு)
உரைத்தாலும் தோன்றா துணர்வு.

## பிறன்மனை விரும்பாமை

36. நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல் - ஒண்டொடி
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல்
மாதர்மேல் வைப்பார் மனம்.

## வீடு அடைதல்

37. வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்
அனைத்தாய நூலகத்தும் இல்லை - நினைப்பதெனக்
கண்ணுறுவ(து) அல்லாற் கவலைபடேல் நெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி.

## உண்மை நிலை

38. நன்றென்றும் தீதென்றும் நானென்றும் தானென்றும்
அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே - நின்றநிலை
தானதாந் தத்துவமாம் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்.

## முப்பதில் முதல்வனை அறி

39. முப்பதாம் ஆண்டளவில் மூன்றற்(று) ஒருபொருளைத்
தப்பாமல் தன்னுட் பெறானாயின் - செப்புங்
கலையளவே ஆகுமாம் காரிகையார் தங்கள்
முலையளவே ஆகுமாம் மூப்பு.

## சிறந்த நூல்கள்

40. தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

ஓம் எனும் பிரணவ மந்திரத்தின் பொருளாகிய விநாயகரின் திருவடிகளை வணங்குவோம்.

அதிவீரராம பாண்டியன் கொற்கை என்னும் நகரை ஆள்பவன்; வெற்றிதரும் வேல்பொருந்திய கையை உடையவன்; பிறந்த குலத்திற்கு மணிமுடி போன்றவன். அவன் நல்ல தமிழில் விளக்கமாகக் கூறியுள்ள நறுந் தொகையைப் படித்துத் தம்மிடத்துக் குற்றம் உண்டாகாதவாறு நீக்குபவர், ஒரு குறையும் இல்லாதவர் ஆவர்.

மழை, பயிர், உயிர், அறம் எல்லாம் வாழ வேண்டும்.

1. கல்வி கற்பித்த ஆசிரியன் கண்ணாற் காணப்பெறும் கடவுள் ஆவான்.
2. குற்றம் இல்லாதபடி பேசுவதே கல்விக்கு மதிப்பாகும்.
3. தம் சுற்றத்தாரைக் காப்பது செல்வர்க்குப் பெருமை.
4. வேதங்களை முறையாக ஓதுவதும் அவற்றிற் சொன்னவாறு நடத்தலும் வேதியர்க்குச் சிறப்பாகும்.
5. நீதிமுறைப்படி ஆட்சி செய்வதே அரசர்க்கு அழகாகும்.
6. மேன்மேலும் வளரும் செல்வத்தைப் பெருக்குவதே வணிகர்க்கு உயர்வு.
7. பயிர் செய்து உண்பதை விரும்புதல் வேளாளர்க்குப் பெருமை.
8. பின்வருவதை முன்னதாக அறிந்து அரசர்க்குச் சொல்லுதலே மந்திரிக்குச் சிறப்பு.
9. அஞ்சாமையும் வீரமும் படைத்தலைவனுக்கு மேன்மை.
10. வந்த விருந்தினருடன் கலந்து இருந்து உண்ணுதலே குடும்பத்துக்கு நல்லது.
11. எதிர்வாதம் செய்யாமல் அமைதியாகக் குடும்பத்தை நடத்துவதே வீட்டுப் பெண்களுக்கு முறை.

"சங்கத் தமிழ் மூன்றுந் தா"
வெற்றி வேற்கை என்னும்

# நறுந்தொகை

## அதிவீரராம பாண்டியர் இயற்றியது.

## கடவுள் வாழ்த்து

பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
சரணவற் புதமலர் தலைக்கணி வோமே.

## நறுந்தொகை படிப்பதால் வரும்பயன்

வெற்றி வேற்கை வீர ராமன்
கொற்கை யாளி குலசே கரன்புகல்
நற்றமிழ் தெரித்த நறுந்தொகை தன்னால்
குற்றங் களைவோர் குறைவிலா தவரே.

## வாழிய நலனே வாழிய நலனே

1. எழுத்தறி வித்தவன் இறைவனாகும்
2. கல்விக் கழகு கசடற மொழிதல்
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்
4. வேதியர்க் கழகு வேதமும் ஒழுக்கமும்
5. மன்னவர்க் கழகு செங்கோல் முறைமை
6. வணிகர்க் கழகு வளர்பொருள் ஈட்டல்
7. உழவர்க் கழகிங்கு உழுதூண் விரும்பல்
8. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்
9. தந்திரிக் கழகு தறுக ணாண்மை
10. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்
11. பெண்டிர்க் கழகெதிர் பேசா திருத்தல்

12. தன் கணவனைப் போற்றுவதே நல்ல குடிப்பிறந்த பெண்ணுக்குச் சிறப்பாகும்.

13. பிறர் தன்னை விரும்பிக் காணுமாறு அழகு செய்து கொள்ளுதல் தாசிக்கு இயல்பாகும்.

14. சிறந்த நூல்களைப் படித்துத் தெளிந்து அடக்கமாக ஒழுகுவதே அறிவுடையார்க்கு மதிப்பாகும்.

15. வறுமையிலும் மானத்தை விட்டுப் பிறரிடம் இரவாமையே ஏழைக்கு மதிப்பாகும்.

16. பனம்பழத்தின் பெரிய விதையிலிருந்து தோன்றும் மரம் மிக உயரமாக வளர்ந்தாலும் ஒருவர் தங்குதற்குக் கூட நிழலைத் தராது. பிறர்க்குப் பயன்படாத உயர் செல்வம் பயனற்றது.

17. மீன் முட்டையை விடச் சிறிதான ஆலம் விதை மன்னர் நால்வகைப் படைகளோடு தங்குதற்குரிய நிழலைத் தரும். பிறர்க்குப் பயன்படும் சிறிய செல்வமும் சிறப்புடையது.

18. உருவத்தால் செல்வத்தால் பெரியவர் எல்லாம் பெருமை உடையவர் ஆகார். கொடை செய்பவரே பெரியவர்.

19. உருவத்தால் செல்வத்தால் சிறியவர் எல்லோரும் சிறுமை உடையவர் அல்லர். கொடுக்காதவரே சிறியவர்.

20. பிறந்த பிள்ளைகள் எல்லாம் பிள்ளைகள் இல்லை. குடிக்குப் பெருமை செய்யும் பிள்ளைகளே உண்மைப் பிள்ளைகள்.

21. உறவினர் எல்லாம் உறவினர் இல்லை. துன்பக் காலத்து உதவி செய்பவரே உண்மை உறவினர்.

22. திருமணம் செய்து கொண்ட பெண்கள் எல்லோரும் பெண்கள் இல்லை. இல்லறம் பேணும் பெண்களே உண்மையான மனைவியர்.

23. பசுவின் பாலை வற்றக் காய்ச்சினாலும் அதன் சுவை குறைவதில்லை; மிகும்.

24. பொன்னைத் தீயிட்டுச் சுட்டாலும் அதன் ஒளி குறையாது; அதிகப்படும்.

25. சந்தனக் கட்டையைக் கல்லில் வைத்துத் தேய்த்தாலும் அது தன் மணத்தில் குறைவதில்லை.

12. குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்

13. விலைமகட் கழகுதன் மேனி மினுக்குதல்

14. அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்

15. வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை

16. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே.

17. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடும்
மன்னர் கிருக்க நிழலா கும்மே.

18. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்

19. சிறியோ ரெல்லாம் சிறியரும் அல்லர்

20. பெற்றோ ரெல்லாம் பிள்ளைகள் அல்லர்

21. உற்றோ ரெல்லாம் உறவினர் அல்லர்

22. கொண்டோ ரெல்லாம் பெண்டிரு மல்லர்

23. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது

24. சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது

25. அரைக்கினுஞ் சந்தனம் தன்மணம் அறாது

26. அகிற் கட்டையைத் தீயிட்டுப் புகைத்தாலும் நறுமணத்தையே வீசும்.

27. கடலை எப்படிக் கலக்கினாலும் அது சேறாகாது, தெளிவாகவே இருக்கும்.

பால், பொன், சந்தனம், அகில், கடல் ஆகிய ஐந்தும் தம்மைப் பிறர் வருத்திய போதும் தமக்குரிய இயல்பில் மாறுபடுவ தில்லை. அவை போல, பெரியோர் தமக்கு மிகுந்த துன்பம் வந்தாலும் தம் உயர் குணங்களிலிருந்து மாறுபடார்.

28. பேய்ச்சுரைக்காயைப் பால் பெய்து சமைத்தாலும் தனக்குரிய கசப்புத் தன்மையில் குறையாது.

29. பலவகையான வாசனைப் பொருள் கூட்டிச் சமைத்தாலும் உள்ளிப்பூண்டு நறுமணம் வீசாது.

பேய்ச் சுரைக்காயும் உள்ளிப்பூண்டும் இனியசுவையும் மணமும் கூட்டிச் சமைத்தாலும் சுவையும் மணமும் பெறுவதில்லை. அவை போலச் சிறுமைக் குணம் உடையோர்க்கு அளவற்ற நன்மை செய்தபோதிலும், தம் சிறுமைக் குணத்திலிருந்து அவர்கள் மாறுபடுவதில்லை.

30. ஒருவனுக்கு வரும் உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவனே காரணமாவான்; பிறர் காரணம் ஆகார்.

31. அறிவு குறைந்தோர் செய்யும் சிறு குற்றங்களைப் பெரியோர் பொறுத்துக் கொள்ளுதல் கடமையாகும்.

32. பெரியோர் பொறுப்பாரென்று நினைத்துச் சிறியவர்கள் பெரிய குற்றங்களைச் செய்வார்களானால், பெரியோர் அக்குற்றங்களைப் பொறுக்க மாட்டார்.

33. பல ஆண்டுகள் பழகினாலும் கீழோர் நட்பு நீர்ப்பாசி போல உறுதி பெறாது.

34. ஒருநாள் பழகினாலும் மேலோர் நட்பு ஆழமாகவும் உறுதியாகவும் இருக்கும்.

35. பிச்சை எடுத்தாலும் கல்வி கற்பது சிறப்பு.

36. படிக்காத ஒருவன் தன்குடிப்பிறப்பின் மேன்மையைப் பேசுதல் நெற்பயிரோடு தோன்றிய பதரை ஒக்கும்.

37. ஒருவன் உயர்ந்த குலத்திற் பிறந்தவனாயினும் படிக்காதவனா யின் தாழ்ந்தவனே ஆவான்.

38. எந்தக் குலத்திற் பிறந்தாலும் யாரா இருந்தாலும் கற்றவரை உயர்வாக அழைப்பர்.கில் பொல்லாங்கு கமழாது

26. புகைக்கினுங் கார

27. கலக்கினுங் தண்கடல் சேறா காது

28. அடினும்பால் பெய்துகைப் பறாதுபேய்ச் சுரைக்காய்

29. ஊட்டினும் பலவிரை உள்ளி கமழாது

30. பெருமையும் சிறுமையும் உ ன்தர வருமே

31. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே

32. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே

33. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே

34. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

35. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே

36. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே

37. நாற்பாற் குலத்தின் மேற்பால் ஒருவன்
கற்றில னாயின் கீழிருப் பவனே

38. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பர்

39. கல்வியறிவு உடையவனையே அரசனும் விரும்புவான்.
40. ஆண்மையும் அறிவும் இல்லாத பிள்ளைகளைப் பெறுவதை விட அக்குடி பிள்ளைகளே இல்லாமற் போவது நல்லது.
41. யானைக்கு நீண்ட கையிருப்பினும் அது தானமும் தருமமும் செய்வதில்லை. செல்வம் பெருகி இருப்பவரெல்லாம் தானம் செய்வதில்லை, செய்வதற்கு மனம் வேண்டும்.
42. பூனை கண்ணை மூடிக்கொண்டு இருந்தாலும் தவமும் அருளும் அதற்கில்லை. பொய்யான தோற்றத்தை நம்பலாகாது.
43. உண்மை ஞானம் உடையவர்க்கு இன்பமும் துன்பமும் இல்லை.
44. கறையான் எந்தப் பொருளையும் அரித்துவிடும். அதுபோலக் கீழ்மக்கள் எதற்கும் கேடுசெய்வர்.
45. நீச்சு நிலை பாராமல் முதலை எல்லா இடத்தும் செல்லும். அதுபோல மூர்க்கர் எங்கும் சென்று தீமை செய்வர்.
46. தீமைக்கு அஞ்சுதலும் பழிக்கு நாணுதலும் முட்டாள்களிடம் இல்லை.
47. நோயாலும் வறுமையாலும் வாடியவர்களுக்கு நாளும் கோளும் இல்லை
48. வறுமைப் பட்டோர்க்கு நண்பர்களும் சுற்றமும் இல்லை.
49. செல்வமும் வறுமையும் வாழ்க்கையில் மாறி மாறி வரும்.
50. குடைநிழலில் யானைமீது அமர்ந்து சென்ற அரசர், ஒரு நாள் அரசு இழந்து காலால் நடந்து எந்த ஊருக்கோ போவார்.
51. தலைமையும் செல்வமும் மேன்மையும் உடையோர் தம் நிலைமாறி உணவின்றி அறத்திற்குச் சோறுபோடும் சத்திரத்தை அடைந்தாலும் அடைவர்.
52. வெளியில் நின்று கூவிப் பிச்சை எடுப்போர் தமது நிலைமாறி ஒருநாள் அரசாளும் பதவி பெறினும் பெறுவர்.
53. மலையளவு செல்வம் பெற்றவரும் ஒரேநாளில் அதனை இழத்தலும் கூடும்.
54. ஏழடுக்கு மாளிகைகள் அழிந்து வீழ்ந்து கழுதை மேயும் பாழ்நிலமாக ஆனாலும் ஆகும்.
55. எருதும் கழுதையும் மேய்ந்த பாழ்நிலம் பெண்ணும் ஆணும் விளையாடி நெல் நிறைந்த நகரமாகவும் மாறும்.

39. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்

40. அச்சம் உள்ளடக்கி அறிவகத் தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலின் அக்குடி
எச்சமற் றேமாந் திருக்கை நன்றே

41. யானைக் கில்லை தானமும் தருமமும்

42. பூனைக் கில்லை தவமும் தயையும்

43. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்

44. சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்

45. முதலைக் கில்லை நீத்தும் நிலையும்

46. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை

47. நாளுங் கிழமையும் நலிந்தோர்க் கில்லை

48. கேளுங் கிளையுங் கெட்டோர்க் கில்லை

49. உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா

50. குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந்து ஒரூர் நண்ணினும் நண்ணுவர்

51. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்

52. அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
அரசோ டிருந்தர சாளினும் ஆளுவர்

53. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்.

54. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்

55. பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தருங் கூடி
நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்.

56. வறியவர்கள் யாசிப்பது இயற்கையே யாகும்.

57. இரந்து கேட்போர்க்குக் கொடுப்பது பொருள் உடையவர் கடமையாகும்.

58. உலகில் அளவற்ற செல்வம் பெற்றிருந்தாலும் மாண்புடைய மனைவியைப் பெறாவிடில் எப்பயனும் இல்லை.

59. அஞ்சாமையுடைய யானை உருவத்தால் பெரிதாக இருந்தாலும் சிறிய மூங்கிற் கோலுக்கு மிகவும் பயப்படும். அதுபோலத் தம்மை ஆள்வோர் இளைஞராயினும் செங்கோலுக்குக் குடிமக்கள் அஞ்சி நடப்பர்.

60. மலையும் காடும் காவலாக அமைந்திருந்த போதும், மான் தனக்குப் பகையான புலியை நினைத்துப் பயப்படும்.

61. ஆரைப் பூண்டு நிறைந்த பள்ளத்தில் தேரை காப்பாக வாழ்ந்தாலும், பாம்பை நினைத்து மிகவும் பயப்படும்.

மனவலிமை இல்லாதவர் காப்பான இடத்தில் இருந்தாலும் மான், தேரைகளைப் போல் பகைவரை நினைத்தபோதே அஞ்சுவர்.

62. கொடுங்கோல் மன்னன் ஆளும் நாட்டில் வாழ்வதை விடக் கடும்புலி வாழும் காட்டில் வாழலாம்.

63. அறிவு ஒழுக்கங்களால் சிறந்த பெரியோர் இல்லாத பெரிய நகரத்தில் வாழ்வதைவிட, தேன் உண்ணும் குறவர் வசிக்கும் மலைப்பக்கம் வாழ்தல் சிறப்பாகும்.

64. காலையும் மாலையும் வேதம் ஓதாத அந்தணர் பதர் ஆவார்.

65. கொடுங்கோலனாய்க் குடிகளை வருத்தி வரிப்பொருள் வாங்கும் கொடிய அரசனும் பதரே யாவான்.

66. முதலைக் கொண்டு வாணிபம் செய்து அதனால் வரும் இலாபத்தை உண்ணாத கஞ்ச வணிகரும் பதர் ஆவார்.

67. விதையும் ஏரும் இருக்கவும், நிலத்தை உழுது பயிர் செய்யாது சோம்பி இருக்கும் வேளாளனும் பதரேயாவான்.

68. தன்னுடைய மனைவியை அவள் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விட்டு அவளைக் கவனியாது விடும் அறிவில்லாதவனும் பதராவான்.

56. இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே
57. இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே

58. நல்ல ஞாலமும் வானமும் பெறினும்
எல்லா மில்லை இல்லில் லோர்க்கே
59. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே

60. குன்றுடை நெடுங்காட் டூடே வாழினும்
புன்றலைப் புல்வாய் புலிக்கஞ் சும்மே
61. ஆரையாம் பள்ளத் தூடே வாழினும்
தேரைபாம் பிற்கு மிகவஞ் சும்மே

62. கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டின்
கடும்புலி வாழுங் காடு நன்றே
63. சான்றோர் இல்லாத தொல்பதி இருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே

64. காலையும் மாலையும் நான்மறை யோதா
அந்தணர் என்போர் அனைவரும் பதரே
65. குடியலைத் திரந்துவெங் கோலோடு நின்ற
முடியுடை யிறைவனாம் மூர்க்கனும் பதரே
66. முதலுள பண்டம் கொண்டுவா ணிபஞ்செய்து
அதன்பய னுண்ணா வணிகரும் பதரே
67. வித்தும் ஏரும் உளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே
68. தன்மனை யாளைத் தாய்மனைக் ககற்றிப்
பின்பவட் பாராப் பேதையும் பதரே

69. தன் மனைவியை வீட்டில் தனித்திருக்கச் செய்து அயலானது மனைவியை விரும்பிச் செல்லும் அறிவிலியும் பதராவான்.

70. தன் தொழிலுக்குரிய கருவியையும் தன்கைப் பொருளையும் பிறனிடம் கொடுத்துச் சோம்பியிருக்கும் அறிவிலியும் பதராவான்.

(65 முதல் 71 வரையுள்ள செய்யுட்களில் அந்தணப் பதர், அரசப் பதர், வணிகப் பதர், வேளாளப் பதர், இல்லறப் பதர், தொழிலாளிப் பதர் என ஆறுவகைப் பதர்களை ஆசிரியர் கூறியுள்ளார்.)

71. வாயே பறையாகவும் நாவே அடிகோலாகவும் கொண்டு சான்றோர் பலகாலும் சொல்லும் உறுதி மொழிகளைக் கருத்துடன் கேட்பீராக.

72. பொய்யன் சொல்லும் பொய், அவனது பேச்சுவன்மையால் மெய்போலக் காணப்படலாம், நம்பக் கூடாது.

73. மெய்யன் சொல்லும் உண்மை, சொல்வன்மை இல்லாமை யால் பொய்போலத் தோன்றக்கூடும். சிந்திக்க வேண்டும்.

74. வழக்குத் தீர்ப்பவர் இரு கட்சிக்காரர்களின் முறையீட்டையும் பலமுறை கேட்டு, இருவரும் ஏற்றுக் கொள்ளும்படி தீர்ப்புச் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லாராயின் அறமின்றி வழக்கில் தோற்றவர் அழுத கண்ணீர் அப்படித் தீர்ப்புச் சொன்னவரின் குடியை வேரோடு அழிக்கும் வாளாகிவிடும்; தேவராலும் காக்க முடியாது.

75. பழியைத் தரும் செய்திகளைப் பேசாது நீக்குக.

76. சுழித்துவரும் வெள்ளப் பெருக்கில் இறங்கக்கூடாது.

77. துணையில்லாமல் நெடுந்தூரம் போகாதே.

78. நன்றாக நீந்தத் தெரிந்திருந்தாலும் பெருவெள்ளத்தைத் தெப்பம் இல்லாமல் கடக்கக் கூடாது.

79. பெண்கள் மீது கொண்ட காதலால் அவர்கள் கூறும் பொருத்தமற்ற காரியங்களைச் செய்ய முயலுதல் கூடாது.

80. முறையான வழியிற் செல்க; அங்ஙனமே திரும்புகன்

81. இந்நூலிற் சொல்லப்பெற்ற இந்நெறிகள் யாவும் உலக நல்வாழ்வுக்கு ஏற்ற வழிகளாம்.

69. தன்மனை யாளைத் தனிமனை யிருத்திப்
பிறன்மனைக் கேகும் பேதையும் பதரே

70. தன்னா யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே

71. வாய்ப்பறை யாகவும் நாக்கடிப் பாகவும்
சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்

72. பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே

73. மெய்யுடை ஒருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே

74. இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே
இருவரும் பொருந்த உரையா ராயின்
மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தம்
மனமுற மறுகினின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி ஈர்வதோர் வாளாகும்மே

75. பழியா வருவது மொழியா தொழிவது

76. சுழியா வருபுனல் இழியா தொழிவது

77. துணையோ டல்லது நெடுவழி போகேல்

78. புணைமீ தல்லது நெடும்புனல் ஏகேல்

79. எழிலார் முலைவரி விழியார் தந்திரம்
இயலா தனகொடு முயல் வாகாதே

80. வழியே ஏகுக வழியே மீளுக

81. இவைகாண் உலகிற் கியலாம் ஆறே

ஒளி வீசும் சடைமுடியையுடைய விநாயகக் கடவுளின் திருவடிகளை வணங்கினால், நன்னெறியில் உள்ள நாற்பது வெண்பாவும் நன்கு மனத்திற் பாடமாகும்.

1. பெண்ணே, எல்லோரையும் புகழ்கின்ற நாக்கு தன்னைப் புகழா விடத்தும், கை அதற்கு நல்ல சுவைப் பொருள்களைக் கொடுக் கின்றது. அதுபோலப் பெரியோரும், தம்மைப் புகழாதவர்க் கும் தாமே சென்று அவர்க்கு வேண்டும் பொருளைக் கொடுப்பர்.

2 பெண்ணே, அன்புடன் சாக்கியர் எறிந்த கல்லை இறைவன் ஏற்றுக் கொண்டான்; அன்பில்லாமல் மன்மதன் எறிந்த மலரை இறைவன் ஏற்றுக் கொள்ளவில்லை. அதலால் நம்மிடத்து அன்புடையார் கூறும் கடுஞ் சொல்லும் இன்சொல்லாகும். அன்பிலார் கூறும் இன்சொல்லும் கொடுஞ்சொல்லாகும்.

3. பெண்ணே, தமக்கு வேண்டும் பொருள் உதவாதவரிட மிருப்பின், பசுவின் கன்றைக் கொண்டு பாலைக் கறந்து கொள்ளுதல் போல, அவர்க்கு உரியவரைக் கொண்டு பெறுதல் வேண்டும்.

4. உதவாத கடல் நீரை மேகம் முகந்து கொண்டு வந்து மழையாகத் தரும். அதுபோல கொடாதவரின் செல்வத்தை வேறு யாராவது எடுத்துக் கொடுப்பர்.

5. பெண்ணே, அரிசியுடன் கூடி இருக்கும் உமி சிறிதளவு நீங்கிப்பின் ஒன்று கூடினாலும், முளைத்தற்குரிய வலிமையை இழந்து விடும். அதுபோலப் பிரியாது நட்பாக இருக்கும் இருவர் சிறிது காலம் பிரிந்து பின் கூடினாலும், அவ்விருவரின் நட்பு சிறப்புக் குறைந்ததேயாகும்.

6. மதிபோன்ற முகத்தையுடையவளே, கண்கள் இரண்டும் தனித்தனியே இரண்டு பொருளைக் காணாமல் ஒரே பொருளைக் காண்பது போலக் கணவனும் மனைவியும் தம்முள் மாறுபாடு இல்லாமல் ஒத்த மனத்துடன் இல்லறக் [illegible]களைச் செய்தல் வேண்டும்.

"சங்கத் தமிழ் மூன்றுந் தா"

# நன்னெறி

## சிவப்பிரகாசர் இயற்றியது

### கடவுள் வாழ்த்து

மின்னெறி சடாமுடி விநாயகன் அடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

### புகழ் கருதாமல் உதவுக

1. என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர் - துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து.

### பெரியோர் வன்சொல்

2. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொற் பிறிதென்க - ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

### முறையறிந்து கொள்க

3. தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றாங்கொள்க - தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொஞ்கையாய் ஆவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து.

### செல்வப் பயன்

4. பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறாம் - பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று பெயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

### பிரியா நட்பின் சிறப்பு

5. நீக்கம் அறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும் - பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம்.

### கணவன் மனைவி கருத்தொற்றுமை

6. காதன் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதி லொருகருமம் செய்பவே - ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி என்முகத்தாய் நோக்கல்தான்
கண்ணிரண்டு மொன்றையே காண்.

7. மிகப்பெரிய கடலும் அகத்தியரால் உண்ணப்பட்டது. அதுபோல 'நாம் கல்விக்கடல்' என்று செருக்குக் கொள்பவர்களும் வல்லவர் ஒருவரால் வெல்லப்படுவர். ஆதலால் செருக்குக் கொள்ளாதே.

8. வெள்ளம் வந்து ஊரைப் பாழாக்கா வண்ணம் கரைகட்டிக் காத்தலே அருமை. கரையை உடைத்தல் எளிமை. அதுபோல அறிவைக் கொன்று அழிவைத் தரும் கோபம் வாராமல், அடக்கிக்கொள்ளும் குணமே அருமை உடைது.

9. சிவபெருமானைச் சார்ந்துள்ளமையால் பாம்பு தன்னினும் வல்லமையுடைய கருடனைக் கண்டு அஞ்சாது. அதுபோன்று ஒருவன் வல்லமையுடைய ஒருவரைச் சார்ந்திருப்பின் தனது பகைவரைக்கண்டு அஞ்ச வேண்டியதில்லை.

10. மதிதன்னிடத்துள்ள களங்கமாகிய இருளை நீக்குதற்கு நினையாமல் உலகில் பரந்துள்ள இருளை அகற்றி உயிர்களுக்கு இன்பம் செய்யும். அதுபோல மேலோர் தமக்கு வந்துள்ள துன்பத்தை நீக்க நினையாதவராயப் பிறர்க்கு வரும் துன்பத்திற்கு மனம் இளகி அதனைத் தீர்த்து வைப்பர்.

11. சுழல்காற்று தன் வலிமையால் சிறிய துரும்பைச் சுழற்றும்; கற்றூணைச் சுழற்ற மாட்டாது. அதுபோல மயங்கச் செய்யும் ஐயறிவும் புல்லறிவாளர்களைத் துன்பம் செய்யும்; நல்லறிவாளர்களைத் துன்பம் செய்ய மாட்டா.

12. பெண்ணே, ஓட்டைக் குடத்தில் நீர் நில்லாமல் ஒழுகிப் போதலே இயல்பு; ஒழுகாது நிற்றல் வியப்பு. அதுபோல ஒன்பது ஓட்டைகளை உடைய உடம்பில் உயிர் நீங்குதல் இயல்பு; நீங்காது நிற்றலே வியப்பு.

13. பெண்ணே, திங்கள் கலைகளின் வளர்ச்சிக்கும் தேய்வுக்கும் தக்கவாறு மக்களுக்கு ஒளியைத் தரும். அதுபோல் மேன்மைக் குணம் உடையோர் தம்மிடத்துள்ள பொருள் வளர்ச்சிக்கும் குறைவுக்கும் தக்கவாறு அன்புடன் பிறர்க்குக் கொடுத்து

## கல்விச் செருக்கு கூடாது

7. கடலே யனையம்யாங் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி - விடலே
முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும்.

## சினங்காத்தல் சிறப்பு

8. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க - வெள்ளம்
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

## வல்லோர் துணை வலிமை

9. மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில் - பலியேல்
கடவு ளவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து.

## விழுமியோர் இயல்பு

10. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர் - திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று.

## மெய்யறிவாளரும் புலன்களும்

11. பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம் - துப்பிற்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறா வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் துரும்பு.

## உடம்பில் உயிர்தங்கல் வியப்பு

12. வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துதல் தானே புதுமை - திருந்திழாய்
சிதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு.

## உள்ளதற்குத் தக உதவுக

13. பெருக்க மொடுசுருக்கம் பெற்ற பொருட்கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர் - சுரக்கும்
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்.

14. பெண்ணே, எந்தக் காலத்திலும் அசைக்க முடியாதிருந்த மேருமலைக்கும் ஒரு காலத்தில் வளைவு வந்தது. ஆதலால் அழியாத பெருஞ்செல்வக் குடியிற் பிறந்துள்ளோம் என்று தலைமைக் குணம் உடையோர் செல்வச் செருக்கு அடையமாட்டார்.

15. நற்குணமுடைய பெண்ணே, ஊமைகளிடம் பழைய நூல் இருந்தும் பயனில்லை. கண்ணில்லாதவனிடம் விளக்கு இருந்தும் பயனில்லை. அவ்வாறே இவ்வுலகில் அன்பு இல்லாதவனிடம் இடம் பொருள் ஏவல்களும் பிறவும் இருந்தாலும் பயனில்லை.

16. பெரிய கடல் தன்னை அடுத்த சிறிய உப்பங்கழியிலும் சென்று பாயும். அதுபோல, அறிவு ஒழுக்கங்களினால் உயர்ந்தோர் தம்மைச் சார்ந்தவர் தாழ்ந்தவராயினும் அவர் இருக்கும் இடம் சென்று துன்பம் நீக்குவர்.

17. பெண்ணே, செழித்து வளர்ந்து நின்று பழமாகிய பயனைக் கொடுத்து அழிந்த வாழையின்கீழ், கன்றும் தாய் மரம் போலவே கனி கொடுக்கும். அதுபோல 'எம் தந்தை இரப்பவர்க்குக் கொடுத்தமையால் வறுமை அடைந்தான்' என்று கருதி அவன் பிள்ளைகள் பிறர்க்கு ஈதலைக் கைவிடார்.

18. ஒலிக்கின்ற வளையல் அணிந்த பெண்ணே, குளிர்ச்சி பொருந்திய திங்களின் வரவால் கடல் பொங்கும்; வெம்மையுடைய ஞாயிற்றின் வரவால் பொங்காது. அது போல மக்கள் இன்சொல் கேட்டு மகிழ்வார்; வன்சொற் கேட்டு மகிழமாட்டார்.

19. மாமரம் தென்றல் வீசும்போது தளிர் காட்டிச் சிறப்புற்றிருக்கும்; சுழல்காற்று வீசும்போது வருந்தும். அதுபோல, கல்வியறிவு ஒழுக்கங்களில் வல்ல பெரியோர் நல்லோர் வருகையால் மகிழ்ச்சியும் தீயவர் வருகையால் துன்பமும் கொள்வர்.

20. பெண்ணே, மிக நோயால் வருந்தும் பிற உறுப்புக்களைக் கண்டு கண் அழும். அதுபோல, பெரியவர் பிறர்படும் துன்பங்களைக் கண்டவுடன், தம் துன்பமாக எண்ணி நெருப்பிற்பட்ட நெய்போல உருகுவர்.

## செல்வச் செருக்குக் கூடாது

14. தொலையாப் பெருஞ் செல்வத் தோற்றத்தோம் என்று
தலையா யவர்செருக்குச் சார்தல் - இலையால்
இரைக்கும்வண் டூதுமலர் ஈர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு.

## வாழ்க்கைக்கு அன்பு அடிப்படை

15. இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்(று)
எல்லா மிருந்துமவற் கென்செய்யும் - நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

## உயர்ந்தோர் உதவும் முறை

16. தம்மையுந் தங்கள் தலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர் - தம்மின்
இழியினுஞ் செல்வர் இடர்தீர்ப்பர் அல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்.

## வறுமையிலும் உதவி

17. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ - பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.

## இன்சொல் இனிமை தரும்

18. இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்றும் மகிழாதே - பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்குங் கடல்.

## நல்லோர் வரவு நல்கும் இன்பம்

19. நல்லோர் வரவால் நகைமுகம்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவார் - வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

## கருணை உள்ளத்தியல்பு

20. பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க - தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

21. கங்கையாற்றின் பெருக்கமானது ஞானிகளால் உணரப்படும் சிவபெருமானின் சடையைக் கண்ட அளவில் அடங்கும். அதுபோல, இலக்கண நூலுணர்ச்சி இல்லாதவரின் கல்வி, இலக்கண நூலுணர்ச்சி உடையார் முன் பயன்படாது.

22. நஞ்சுடைய பாம்பாயினும் அதன் பருத்த மாணிக்கத்தைக் கண்டு யாரும் நீக்கமாட்டார். பாற்கடலாயினும் அதனிடத்துத் தோன்றிய நஞ்சினை யாரும் விரும்பிக் கொள்ளமாட்டார். ஆதலால் பிறப்புக் காரணமாக உயர்வு தாழ்வு கொள்ளக்கூடாது.

23. பெண்ணே, பலமுறை சிற்றெறும்புகள் ஊர்ந்துவரின் கருங்கல்லும் குழிந்து போகும். அதுபோலப் பெண்களிடம் வாய்ப்பேச்சாகப் பழகி வந்தாலும் மனத்திட்பம் நாளுக்கு நாள் தளர்ந்து போகும்.

24. சோலையில் சுவைமிகுந்த பழங்கள் நிறைய இருப்பினும் வேப்பம் பழத்தையே காக்கைகள் விரும்பும். அதுபோல ஒருவரிடம் நற்குணங்கள் பல இருப்பினும் கீழ்மக்கள் அவரிடம் உள்ள தீக்குணத்தையே பலரிடமும் சென்று எடுத்துப்பேசுவர்.

25. அழகிய கண்களையுடையவளே, தெப்பத்தில் சேர்ந்த கனமுடைய பொருள் கனத்தை இழக்கும். அதுபோல அறிவில்லாத கீழ்மக்களைக் கற்றுணர்ந்த சான்றோர் சேரின் தமது சிறப்பை இழப்பர்.

26. கதிர் ஒளியின் துணைக்கொண்டு மிகப்பெரிய பொருளையும் காட்டும் கருமணியின் உருவம் சிறிய கண்ணின் அளவாகவே இருக்கும். ஆதலால் உருவத்தில் சிறியவர் என்று கருதி அவரிடம் உள்ள அறிவின் பெருமையை யாரும் இகழார்.

27. நாக்கு ஓர் உதவியும் செய்யாதிருக்க, பற்கள் வலிய பொருள்களை மென்று அதற்கு இனிய சுவையைக் கொடுக்கும். அதுபோலச் சான்றோர் எதிர் உதவி கருதாமல் தம்மால் இயன்ற உதவியைப் பிறர்க்கு மெய்வருந்திச் செய்வர்.

## கல்லார்செருக்கு கற்றார்முன் அடங்கும்

21. எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம் - எழுத்தறிவார்
ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

## பிறப்பினால் உயர்வு தாழ்வு இல்லை

22. ஆக்கும் அறிவா னலது பிறப்பினால்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க - நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

## மனவுறுதி வேண்டும்

23. பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
நிகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம் - நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியு மே.

## கீழோர் பிறர் குற்றமே பேசுவர்

24. உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே - வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றோ
காக்கை விரும்பும் பனி.

## கீழோர் சேர்க்கையால் சிறப்புக் கெடும்

25. கல்லா அறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகனம் நண்ணாரே - வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள்.

## உருவத்தைக் கொண்டு மதிப்பிடாதே

26. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார் - மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றோ விளம்பு.

## கைம்மாறு கருதாது உதவுக

27. கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாஞ்செய்வர் - அம்மா
முளைக்கும் எயிறு முதிர்சுவை நாவிற்கு

28. காயாக இருக்கும் நிலையிலும் வாழை பயன்படும்; எட்டி பழுத்த நிலையிலும் பயன்படாது. அவைபோல் பேரறிவுடையவர் கோபமுள்ள காலத்திலும் கொடுப்பர்; கீழ்மக்கள் மனமகிழ்ச்சி உள்ள காலத்திலும் பிறர்க்கு ஒரு பொருளும் கொடார்.

29. இன்சொல்லாய், திங்களிடத்துள்ள மான் பூமியில் உள்ள புலிகளுக்குப் பயப்படாது. அதுபோல உயர்ந்த பரம் பொருளிடத்தே மனம் அழுந்தப் பெற்ற ஞானிகள் உடலுக்கு ஒரு கோடி துன்பம்வரினும் அச்சமடையார்.

30. வெள்ளம் வருவதற்கு முன் அணைகட்டி வைக்காதவர் வெள்ளம் பெருகும்போது யாதும் செய்ய முடியாமல் துன்புறுவர். உயிர்களைத் தவறாமல் கொண்டு செல்லும் இயமன் வருவதற்குமுன் மனங்கனிந்து அறஞ்செய்தல் வேண்டும்.

31. சிறந்த அணிகலன்களையுடைய பெண்ணே, உடம்பில் தாக்கும் பெரிய கோலின் அடியைக் கை விரைந்து போய்த் தன்மேல் தாங்கிக் கொள்ளும். அதுபோல, சான்றோர் பிறர்க்கு வரும் துன்பத்தைத் தாமே வீரமொடு தாங்கிக் காப்பர்.

32. அழகிய நெற்றியை உடையவளே, வயிரம் பொருந்திய வலிய கதவாயினும் தாழ் இல்லாவிடின் வலிமை குறைந்ததாய் விடும். அதுபோல, நூல்களிற் சொல்லப்படும் விதி விலக்குகளை அறிந்து அறம் செய்யாராயின் அதனால் வரும் சிறப்பு இல்லாது போகும்.

33. நீரைக்கட்டி வைக்கும் சிறிய குளத்திற்கே கரை காப்பு வேண்டும்; பெரிய கடலுக்குக் கரைகாப்பு வேண்டுவதில்லை. அதுபோல, அறிவில்லாத சிறியோர் தம்மைப் பிறர் இகழாவண்ணம் காத்துக் கொள்ள வேண்டும். அறிஞர்க்குக் காப்பு வேண்டுவதில்லை.

34. பெண்ணே, அழகிய ஒளியுடைய கண்களே இருளுக்கு அஞ்சும். அதுபோன்று அறிவுடையோரே பழிக்கு அஞ்சுவர். குருட்டுக்கண் இருளைக் கண்டு அஞ்சுவதில்லை. அதுபோல

## வெறுப்பிலும் மேலோர் உதவுவர்

28. முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர் - நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை.

## பத்தியுடையார்க்கு அச்சமில்லை

29. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கும் ஒருகோடி யாக - நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பணிமொழியாய் அஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

## காலத்தில் அறஞ் செய்க

30. கொள்ளுங் கொடுங்கூற்றம் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே - வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு.

## பிறர் துயரம் தாங்குக

31. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார் - நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது.

## முறையறிந்து அறம் செய்க

32. பன்னும் பனுவல் பயன்றேர் அறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே - நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

## பெரியோர்க்குக் காப்பு வேண்டாம்

33. எள்ளா திருப்ப இழிஞர்போற் றற்குரியர்
விள்ளா அறிஞரது வேண்டாரே - தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்

## பெரியோர் பழிக்கு அஞ்சுவர்

34. அறிவுடையா ரன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும் - பிறைநுதலால்
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்

35. வேல் போன்ற கண்களை யுடையவளே, வாழைப்பழத்தை இனிய பால் அவாவும்; புளிப்பாகிய காடிநீர் அதனை விரும்பாது. அதுபோல, கற்ற அறிவினரை மேன்மக்கள் விரும்புவர்; கீழோர் அவரை மதியார்.

36. மக்கள் நெல்லுக்கே நீர் இறைப்பர்; காட்டில் உலர்ந்து போகும் புல்லுக்கு நீர் இறைக்க மாட்டார். அது போல் சான்றோரும் நல்லொழுக்கம் உடையவர்க்கே கொடுப்பர்; ஒழுக்கம் இல்லாதவர்க்குக் கொடுக்க மாட்டார்.

37. பெண்ணே, தன்னைத்தானே பெரிதாக நினைத்து நின்ற விந்தமலையானது அகத்தியரால் உயர்வு குறைந்து தாழ்ச்சி அடைந்தது என்பதை நீ அறியாயோ! ஆதலால் பெரியோர் முன் தன்னைத்தானே புகழ்ந்து சொல்லும் அறிவிலியும் தாழ்ந்து போவான்.

38. நற்குணமுடைய பெண்ணே, காய் நாட்சென்று முற்றினால் உண்ணுதற்குரிய இனிய கனியாகும். இளந்தளிர் நாட் சென்று முற்றினால் பயன்இல்லை. அதுபோல நல்லோர் செய்யும் நட்பு நாடோறும் வளர்ந்து பயன்தரும்; தீயோர் செய்யும் நட்பு நாடோறும் வளராது கெடும்.

39. பெண்ணே, செழித்த பூங்கொடியின் பூ மலர்ந்த அன்று மட்டும் மணமுடையதாகிப்பின் கெட்டு விடும். அதுபோல் கல்வியறிவில்லாதவர்கள் செய்யும் மிகுதியான நட்பும் கூடியவுடனே தீமையே தரும்.

40. ஆபரணங்கள் அணியும் பிற உறுப்புக்கள் ஆபரணம் அணியாத உறுப்பாகிய கண்ணுக்கு ஒப்பாக மாட்டா. அதுபோல, பொன் ஆபரணங்களை அணிந்த அரசர் அவற்றை அணியாத நிலையான பேரறிவை உடைய அறிஞர்க்கு ஒப்பாக மாட்டார்.

## மேன்மக்கள் கற்றோரை விரும்புவர்

35. கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தாம் என்றும் மதியாரே - வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்.

## தக்கார்க்கு உதவுக

36. தக்கார்க்கே ஈவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர் - எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

## தற்புகழ்ச்சியால் தாழ்வு

37. பெரியோர்முன் தன்னைப் புகழ்ந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும் - தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

## நல்லோர்தொடர்பு நலம்தரும்

38. நல்லோர் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை யாகாதே - நல்லாய்கேள்
காய்முற்றின் தன்தீங் கனியாம் இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்.

## தீயோர்தொடர்பு தீமைதரும்

39. கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
உற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே - பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம்.

## அரசரினும் அறிஞரே சிறந்தவர்

40. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தான் மற்றொவ்வார் - மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அதுபுனையாக்
காணுங்கண் ஒக்குமோ காண்.

'உலகநீதி'யைச் சொல்வதற்கு நூலறிவால் அறிய முடியாத பெருமையினையுடைய யானைமுகக் கடவுள் துணையாவார்.

நெஞ்சமே!

1. நாள்தோறும் தவறாமல் படிக்க வேண்டும்.
யாரிடத்தும் தீயசொற்களைப் பேசக்கூடாது.
பெற்ற தாயை ஒரு பொழுதும் மறக்கக் கூடாது.
வஞ்சனை செய்பவர்களுடன் நட்புக்கொள்ளக்கூடாது.
போகத் தகாத இடங்களுக்குப் போகக் கூடாது.
ஒருவர் நேரில் இல்லாதபோது அவருடைய குறைகளைப் பிறரிடம் கூற வேண்டாம்.
தோள் வலிமை மிகுந்த குறவர் இனத்தைச் சேர்ந்த வள்ளியின் கணவனாகிய மயிலேறும் பெருமானை வணங்குவாயாக.

மனமே!

2. உள்ளம் அறிந்த ஒன்றை மறைத்துப் பேசாதே.
நிலையில்லாத பயனற்ற செயல்களைச் செய்யாதே.
பாம்புபோன்ற நஞ்சுடைய உயிர்களுடன் பழகாதே.
உள்ளன்பு இல்லாதவரோடு நட்புச் செய்யாதே.
துணையில்லாமல் தனிமையாக நெடுவழி போகாதே.
உன்னை அண்டியவர்க்குக் கெடுதி செய்யாதே.
வலிமை மிகுந்த குறவர் இனத்தைச் சேர்ந்த வள்ளியின் கணவனும் மயிலை ஊர்தியாகக் கொண்டவனுமாகிய முருகனை வணங்குவாயாக.

மனமே!

3. நீ நினைத்தபடி யெல்லாம் நடக்காதே.
பகைவனை உறவு என்று நினைத்து ஏமாறாதே.
தேடிய பொருளைக்கொண்டு நீயும் வாழ்ந்து பிறரையும் வாழச் செய்; புதைத்து வீணாக்காதே.
அறச்செயலை ஒருநாளும் மறக்காதே.
கோபத்தை வளர்த்துத் துன்பத்தை அடையாதே.
உன்மீது கோபங்கொண்டிருப்பவர் வீட்டுவழி போகாதே.
காட்டில் விங்குகளைத் தேடும் குறவருடைய பெண்ணாகிய வள்ளியை மணந்த முருகனை வழிபடுவாயாக.

''சங்கத் தமிழ் மூன்றுந் தா''

# உலகநீதி

## உலகநாதர் இயற்றியது

### காப்பு

உலக நீதிப் புராணத்தை உரைக்கவே
கலைக ளாய்வருங் கரிமுகன் காப்பு.

### பாட்டு 1

ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போக வேண்டாம்
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்
வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

### பாட்டு 2

நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்
நிலையில்லாக் காரியத்தை நிறுத்த வேண்டாம்
நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்
நல்லிணக்கம் இல்லாரோடு இணங்க வேண்டாம்
அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்
மஞ்சாடும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

### பாட்டு 3

மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்
மாற்றனை உறவென்று நம்ப வேண்டாம்
தனந்தேடி உண்ணாமல் புதைக்க வேண்டாம்
தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்
சினந்தேடி அல்லலையுந் தேட வேண்டாம்
சினந்திருந்தார் வாசல்வழிச் சேர வேண்டாம்
வனந்தேடுங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

மனமே!

4. பிறர் குற்றங்களைப் பலரிடம் எடுத்துச் சென்று சொல்லாதே.
கொலை, களவு செய்பவர்களுடன் நட்புக்கொள்ளாதே.
படித்தவரை ஒருபோதும் பழித்துப் பேசாதே.
கற்புடைய பிற பெண்களைக் காமுறாதே.
அரசரோடு எதிர்வாதம் செய்யாதே.
கோவில் இல்லாத ஊரில் குடியிருக்காதே.
ஈடு இல்லாத வள்ளியின் கணவன் முருகனை வணங்குவாயாக.

மனமே!

5. மணமான பெண்ணைக் கணவருடன் வாழவிடாமற் செய்யாதே.
மனையாளைக் குற்றம் சொல்லாதே; பொறுத்துக்கொள்.
செய்யத்தகாத தீயநெறியில் விழக்கூடாது.
போரில்பயந்து புறங்காட்டித் திரும்பி வரவேண்டாம்.
பண்பில் தாழ்ந்த குலத்தவனோடு சேராதே.
எளியவர்களை இகழ்ந்து பேசாதே.
சிறந்த வாழ்க்கையுடைய குறவர் மகளான வள்ளியின்
கணவன் முருகனை வணங்குவாயாக.

மனமே!

6. வீண்பேச்சுக்காரரின் சொற்களைக் கேட்டு அலையாதே.
மதியாதர் வீட்டுக்குப் போகாதே.
பெரியோர்கள் கூறும் அறிவுரையை மறக்காதே.
முன்கோபம் உடையவருடன் சேராதே.
ஆசிரியரின் சம்பளத்தைக் கொடாமல் வைத்துக் கொள்ளாதே.
வழிப்பறி செய்வாரோடு சேராதே.
மிகுந்த புகழ் உடையவனும் ஒப்பற்ற வள்ளியின்
கணவனுமாகிய முருகனை வணங்குவாயாக.

## பாட்டு 4

குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்
கொலைகளவு செய்வாரோடு இணங்க வேண்டாம்
கற்றவரை ஒருநாளும் பழிக்க வேண்டாம்
கற்புடைய மங்கையரைக் கருத வேண்டாம்
கொற்றவனோடு எதிர்மாறு பேச வேண்டாம்
கோயிலில்லா ஊரிற்குடி யிருக்க வேண்டாம்
மற்றுநிகர் இல்லாத வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

## பாட்டு 5

வாழாமற் பெண்ணைவைத்துத் திரிய வேண்டாம்
மனையாளைக் குற்றமொன்றுஞ் சொல்ல வேண்டாம்
வீழாத படுகுழியில் வீழ வேண்டாம்.
வெஞ்சமரிற் புறங்கொடுத்து மீள வேண்டாம்
தாழ்வான குலத்துடனே சேர வேண்டாம்
தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
வாழ்வான குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

## பாட்டு 6

வார்த்தைசொல்வார் வாய்பார்த்துத் திரிய வேண்டாம்
மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்
மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்க வேண்டாம்
முன்கோபக் காரரோடு இணங்க வேண்டாம்
வாத்தியார் கூலியைவைத் திருக்க வேண்டாம்
வழிபறித்துத் திரிவாரோடு இணங்க வேண்டாம்
சேர்த்தபுக ழாளனொரு வள்ளி பங்கன்
திருக்கைவே லாயுதனைச் செப்பாய் நெஞ்சே.

*மனமே!*

7. எண்ணிப்பாராமல் எச்செயலையும் செய்ய வேண்டாம்.

கெடுங்கணக்கை ஒரு பொழுதும் பேசாதே.

பிறர் சண்டை பிடித்துக் கொள்ளும் இடத்திற்குப் போகாதே.

ஊருக்குப் பொதுவிடத்தில் குடியிருக்காதே; நிலைக்காது.

இரண்டு மனைவி வாழ்க்கை ஒரு போதும் வேண்டாம்.

ஏழைகளின் பகையை வளர்த்துக் கொள்ளாதே.

பறவைகளின் நிறைந்த தினைப்புனங் காக்கும் வள்ளியின் கணவனாகிய முருகனின் திருவடியைப் புகழ்ந்து சொல்வாயாக.

மனமே!

8. சேரத்தகாத கூட்டாத்தாரொடு சேராதே.

பிறர்செய்த உதவியை எக்காலத்தும் நினைக்கவேண்டும்.

ஊராரைப் பற்றிக் கோள் சொல்லி வீண்காலம் போக்காதே.

உறவினர்களை இழிவாகப் பேசாதே.

புகழ்தரும் செயல்களைத் தவறாமல் செய்.

பிறருக்குப் பொறுப்பேற்றுத் துணையில் மாட்டிக் கொண்டு அலைய வேண்டாம்.

பெருமை பொருந்திய குறத்தி வள்ளியின் கணவனான மயில்வாகனனை வணங்குவாயாக.

மனமே!

9. நடுநிலை இல்லாமல் ஊர்ப்பொது மன்றத்தில் ஒருபக்கமாகப் பேசவேண்டாம்.

மனம் கொதித்து எல்லோரிடமும் வம்பு செய்யாதே.

கருணையில்லாமல் பிறரைத் துன்புறுத்தாதே.

நீ பாரா ஒன்றைப் பார்த்தது .போல அளக்காதே.

கேட்போர் மனம் புண்படும்படி கடுமையாகப் பேசாதே.

புறம் பேசிக் காலம் கழிப்பவரோடு சேராதே.

பூமியைத் தன் திருவடியால் அளந்த திருமாலின்

தங்கையாகிய உமையினது மைந்தனும் என் தலைவனுமாகிய மயில்வாகனனை வாழ்த்துவாயாக.

## பாட்டு 7

கருதாமற் கருமங்கள் முடிக்க வேண்டாம்
கணக்கழிவை ஒருநாளும் பேச வேண்டாம்
பொருவார்தம் போர்க்களத்திற் போக வேண்டாம்
பொதுநிலத்தில் ஒருநாளும் இருக்க வேண்டாம்
இருதாரம் ஒருநாளும் தேட வேண்டாம்
எளியாரை எதிரியிட்டுக் கொள்ள வேண்டாம்
குருகாரும் புனங்காக்கும் ஏழை பங்கன்
குமரவேல் பாதத்தைக் கூறாய் நெஞ்சே.

## பாட்டு 8

சேராத இடந்தனிலே சேர வேண்டாம்
செய்ந்நன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்
ஊரோடும் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்
உற்றாரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்
பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்
பிணைபட்டுத் துணைபேசித் திரிய வேண்டாம்
பாராருங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

## பாட்டு 9

மண்ணின்று மன்றோரம் செய்ய வேண்டாம்
மனஞ்சலித்துச் சிலுகிட்டுத் திரிய வேண்டாம்
கண்ணழிவு செய்துதுயர் காட்ட வேண்டாம்
காணாத வார்த்தையைக்கட் டுரைக்க வேண்டாம்
புண்படவே வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்
புறஞ்சொல்லித் திரிவாரோடு இணங்க வேண்டாம்
மண்ணளந்தான் தங்கையுமை மைந்தன் எங்கோன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

மனமே!

10. வெறும் வீரம் பேசுபவரோடு சேராதே.

வாதம் பேசி நடைமுறைகளை அழித்து விடாதே.

வலிமை பேசி வீண்கலகம் செய்யாதே.

கடவுளை நாள்தோறும் நினைக்கவேண்டும்.

சாகும்நிலை வரினும் பொய் பேசக்கூடாது.

உன்னை இகழ்ந்த உறவினரை விரும்பாதே.

குறிசொல்லும் குறக்குடியில் பிறந்த வள்ளியின் கணவன் முருகனின் திருப்பெயரைச் சொல்லி வழிபடுவாயாக.

மனமே!

11. ஒற்றுமையுள்ள ஒரு குடும்பத்தைப் பிரித்துக் கெடுக்கக் கூடாது.

கொண்டைக்கு மேலே பூத்தெரியும்படி முடியக் கூடாது.

பிறர்மீது பழியைச் சுமத்தித் தலையிட்டு அலைய வேண்டாம்.

கொடிய குணம் உடையவரோடு நட்புச் செய்யாதே.

பெருமை மிகுந்த தெய்வத்தை இகழக்கூடாது.

வாழ்க்கையில் சிறந்து விளங்கும் பெரியோரை வெறுத்துப் பேச வேண்டாம்.

மாறுபாடு உடைய குறவர் பெண்ணாகிய வள்ளியின் கணவனாகிய முருகனை வணங்குவாயாக.

12. உலகநாதனாகிய நான் முருகனை அருமையான தமிழில் பாட விரும்பினேன். மிகவிரும்பி நல்ல கருத்துக்கள் பலவற்றைத் திரட்டி நன் மொழியில் 'உலகநீதி' என்னும் நூலைப் பாடினேன். இந்நூலை விரும்பிக் கற்றவர்களும் பிறர் படிக்கும்போது கேட்டவர்களும் தெளிந்த அறிவும் மகிழ்ச்சியும் பெற்று வாழ்வார்கள்; புகழும் நீண்ட வாழ்வும் பெறுவார்கள்.

## பாட்டு 10

புறம்பேசித் திரிவாரோடு இணங்க வேண்டாம்
வாதாடி வழக்கழிவு செய்ய வேண்டாம்
திறம்பேசிக் கலகமிட்டுத் திரிய வேண்டாம்
தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்
இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்
ஏசலிட்ட உற்றாரை நத்த வேண்டாம்
குறம்பேசி வாழ்கின்ற வள்ளி பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூறாய் நெஞ்சே.

## பாட்டு 11

கூறாக்கி ஒருகுடியைக் கெடுக்க வேண்டாம்
கொண்டைமேல் பூத்தெரிய முடிக்க வேண்டாம்
தூறாக்கித் தலையிட்டுத் திரிய வேண்டாம்
துர்ச்சனராய்த் திரிவாரோடு இணங்க வேண்டாம்
வீறான தெய்வத்தை இகழ வேண்டாம்
வெற்றியுள்ள பெரியோரை வெறுக்க வேண்டாம்
மாறான குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

## பாட்டு 12

ஆதரித்துப் பலவகையாற் பொருளுந் தேடி
அருந்தமிழால் அறுமுகனைப் பாட வேண்டி
ஓதுவித்த வாசகத்தால் உலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலித்துக் கற்றோரும் கேட்ட பேரும்
கருத்துடனே நாடோறும் களிப்பி னோடு
போதமுற்று மிகவாழ்ந்து புகழுந் தேடிப்
பூலோக முள்ளளவும் வாழ்வர் தாமே.





ஸ்ரீஸ்ரீஸ்ரீ எச்சில் பொறுக்கி
**ஆறுமுக சுவாமி**

**AL.C**

## பொறுப்புணர்வு உறுதிமொழி

- நான் செய்கின்ற எல்லா செயல்களுக்கும் நானே பொறுப்பாவேன்.
- என்னுடைய செயல்களின் தன்மைகள் சரியானதா தவறானதா என்பதை என்னுடைய கல்வி அறிவின் மூலம் உணர்வேனாகும்.
- அவ்வாறு உணர்ந்து செய்கின்ற செயல்களின் பலன்கள் என்னையே சார்ந்தது என்பதை நன்கு அறிவேன்.
- எனக்குத் தரப்பட்ட எல்லா பொறுப்புக்களையும் எனது முழு மன ஈடுபாட்டோடு செய்வேன் என்பதை உறுதி கூறுகிறேன்.
- தன்னுடைய கடமைகளை எவ்வித சுயவிருப்பு வெறுப்புகளுக்கு இடம் தராமல் என்னுடைய அர்ப்பணிப்பை தருவேன் என்பதை உறுதியளிக்கிறேன்.

அன்புடன்....

பேராசிரியர். **சி. ராக்கப்பன்**
ராம.அழ.சித.வீடு. 36, வெங்கடாச்சலம் செட்டியார் தெரு, கோட்டையூர்
சிவகங்கை மாவட்டம் - 630 106. செல்: 9994214666